# மங்கை

ஆகஸ்டு '92

☆ ஸ்ரீ தத்தாத்ரேயர்
(அருள்வலம்)

☆ சென்னை உயர்நீதிமன்ற
நீதிபதியின் சந்திப்பு

☆ வீட்டு வேலைகளைச் செய்ய
விரும்பும் கலெக்டர்!

☆ மகளிர் வில்லுப்பாட்டுக் குழு

☆ 4 சிறுகதைகள்

☆ சமையற்கலைப் போட்டி

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/-

# புதிய பாரீஸ் மில்க் பிஸ்கட் புதிர்










பாரீஸ்

மில்க் பிஸ்கட்டில் புதுமை..



இதில் ஏற்பட்டுள்ள மாற்றம் புதிய, கவர்ச்சியான

பாக்கெட் மட்டுமல்ல.. உள்ளே இருப்பதிலும் கூட!




மேலும் சத்து நிறைந்த, புதிய பாரீஸ் மில்க் பிஸ்கட் இப்போது

மேலும் மொறுமொறுவென்று, மேலும் புதுமையாக,

மேலும் சுவையாக!

## சந்தாதாரர்களுக்கு ஒரு வேண்டுகோள்

எங்களுக்கு அம்புலிமாமாவிற்கும் அதன் மற்ற மொழிப் பதிப்புகளான சந்தமாமாவிற்கும் ஆயிரக்கணக்கான சந்தாதாரர்கள் இருக்கிறார்கள். எனவே உறைகளின் மீது முகவரியைக் குறிப்பது போன்ற பணிகளை முந்தைய மாத முதல் வாரத்திற்குள்ளேயே செய்ய வேண்டியுள்ளது. ஆகையால் தாமதம் இல்லாமல் நீங்கள் உங்கள் பிரதிகளைப் பெற வேண்டும் என்றால் உங்களது முகவரியில் மாற்றம் ஏதாவது இருந்தால் உடனேயே எமக்குத் தெரிவிக்க வேண்டியது மிகமிக அவசியம். உங்களுக்குச் சிறந்த முறையில் பணியாற்ற உதவ வேண்டுகிறோம்.

**டால்டன் ஏஜன்சீஸ்,**
சந்தாதாரர் பிரிவு
சந்தமாமா பில்டிங்ஸ்
சென்னை-600 026



விடை: [illegible]




# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி

## நவ பாரதச் சிற்பிகள்

இன்றைக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் 1942 ஆகஸ்ட் 9ந் தேதி இந்திய தேசிய காங்கிரஸ் மகாத்மா காந்தியடிகளின் தலைமையில் பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் 'வெள்ளையனே வெளியேறு' எனக் கூறி நம் நாட்டிற்கு சுதந்திரம் கொடுக்கும் படிக் கேட்டார். அந்த இயக்க ஆரம்பத்தை நினைவு கூறத் தக்க முறையில் நாடு கொண்டாட வேண்டுமென்று ஏற்பாடு கள் செய்யப்பட்டு வருகின்றன.

இந்த இயக்கம் ஆரம்பமாகி ஐந்தாண்டுகளுக்கு பிறகே நம்நாடு சுதந்திரம் பெற்றது. ஒரு நாட்டிற்கு அதன் அரசியல் சட்டமே புனிதமானது. உயர்ந்தது. ஆனால் நாட்கள் ஆக ஆக மக்கள் தாமே வகுத்த அரசியல் சட்டங்களில் சில மாற்றங்களைச் செய்ய விரும்புவது இயல்பே. சில சமயங் களில் புதிய அரசியல் சட்டங்களையும் வகுக்கிறார்கள். அண்மையில் சோவியத் யூனியன் உடைந்து சில குடியரசு கள் புதிய அரசியல் அமைப்பில் உருவானதும், இரு ஜெர்மனிகள் ஒரே நாடாகியதும், யுகோஸ்லாவியா புதிய அரசியல் சட்டம் இயற்றிக் கொண்டதும், கம்போடியாவும் தாய்லாந்தும் புதிய அரசியல் சட்ட நிர்ணயம் செய்து கொண்டதும் சில எடுத்துக்காட்டுகளாகும்.

இந்திய அரசியல் நிர்ணயச் சட்டம் 42 ஆண்களுக்கு முன் 1950ல் முதலில் உருவாக்கப்பட்டுப் பின் சுமார் 60 முறை திருத்தப்பட்டது. தற்போது புல அறிஞர்கள் நம் அரசியல் நிர்ணய சட்டங்களை பரிசீலித்து நம்நாடு மேலும் முதிர்ச்சி அடைந்து அமைதி வழியில் நேர்மையாய் நியாயமாய் முன் னேறப் புதிய அரசியல் சட்ட நிர்மாணம் செய்து நம் மேதை கள் நவ பாரதத்தை உருவாக்குவார்கள் என உறுதியுடன் நம்புவோம்.

மதிமுகம்: 91 ஆகஸ்டு 1992 புன்னகை: 2

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00

CHITRA

செய்திகளும் தகவல்களும்

# ஆப்கானிஸ்தானில் அமைதி



கடந்த பதிநான்கு ஆண்டுகளாக ஆப்கனிஸ்தானில் நடந்து வந்த உள் நாட்டுப் போர் ஒருவிதமாக முடிந்தது. முஜாஹிதீன் கொரில்லாக்கள் முதலில் சோவியத் யூனியன் அமைத்துக் கொடுத்த பப்ரக் கர்மால் அரசையும் பின்னர் டாக்டர் நஜிபுல்லா அரசையும் எதிர்த்துப் போராடினார்கள். இது மட்டுமல்ல, மதத் தீவிரவாதக் கும்பல்களும் தமக்குள் சண்டையிட்டன.

டாக்டர் நஜிபுல்லா தாம் அதிபர் பதவியிலிருந்து விலகத் தயார் என அறிவிக்கவே முஜாஹிதீன்கள் பேராசிரியர் சிக்பதுல்லாவை தற்கால அதிபராக இருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அவர் முப்பத்தோரு பேர்கள் கொண்ட ஒரு கௌன்சிலை அமைத்து அதில் சேருமாறு மதத் தீவிரவாதக் கட்சியான ஹெஜ்ப்-இ-இஸ்லாமின் தலைவரான குத்புத்தீன் ஹெக்மத்யாருக்கு அழைப்பு விடுத்தார். அதற்கு ஹெக்மத்யார் சில நிபந்தனைகளை விதித்தார். நஜிபுதுல்லா அரசிற்கு உறுதுணையாக உள்ள ஜனத் அப்துல் ரஷீத் தோஸ்தமின் தலைமையில் இருக்கும் உஜ்பெக் இராணுவம் காபூல்



கமிஷன் பல்வேறு கோஷ்டிகளுக்கிடையே சமாதானம் ஏற்படுத்த முயன்றது. அதன் பயனாக கௌன்சில் உறுப்பினர்கள் ஹெக்மதியாருடன் தனித்தனியாக பேசினார்கள். ஆனால் ஹெக்மதியார் மதூதுடன் பேசுவதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வந்தார். முடிவில் மே 25ந் தேதி நடந்த பேச்சு வார்த்தைகளில் இஸ்லாமியக் குடியரசை நிறுவுவது எனத் தீர்மானிக்கப்பட்டது.

ஆறுமாத காலத்துள் தேர்தல் நடத்த வேண்டும் என்றும் அதன்பின் காபூலிலிருந்து படைகள் வெளியேற வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. ஹெக்மதியாரோ படைகள் காபூலிலிருந்து வெளியேறினாலேதான் கௌன்சிலில் சேர முடியும் எனக் கூறி விட்டார். ஆனால் தேர்தல்கள் நடக்க படைகள் இருக்க வேண்டும் என்றே அங்கு பலரும் கருதுகிறார்கள்.

நகரை விட்டு வெளியேற வேண்டும் என்பது அவற்றில் முக்கியமானது. ஆனால் சிக்பதுல்லாவோ எவ்வித நிபந்தனையும் விதிக்காமல் ஹெக்மதியார் கௌன்சிலில் சேர வேண்டும் என்றார். அதனை இராணுவ மந்திரியும் ஜமாயத்-கு-இஸ்லாமின் தலைவருமான அகமத் மசூத்தும் ஆதரவு அளித்தார்.

இந்நிலையில் ஹெஜ்ப்-இ-இஸ்லாமின் படை வீரர்கள் ஜெனரல் தோஸ்தமி வீரர்களுடன் கைகலந்தனர். அவர்கள் காபூல் நகரின் மீது வெடிகுண்டுகளை வீசினார்கள். அத்தாக்குதலில் பழங்கால அரண்மனைகளும், அதிபர் மாளிகையும் படுசேதமுற்றன. அதனால் காபூலிலிருந்து படை வீரர்களை அனுப்பி விடுவது சரியல்ல என்று அரசு கருதியது.

ஜலாலுத்தீன் தலைமையில் ஒரு







# நல்ல சாபமே

வெகு காலத்திற்கு முன் இந்திர புரியை இந்துவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது மகள் இந்துமதி மிக அழகானவள். இதைக் கேள்விப்பட்ட வீரபுர மன்னன் வீரசேனன் அவளை தான் மணக்க விரும்புவதாக இந்துவர்மனிடம் தூது அனுப்பினான்.

ஆனால் இந்துசேனன் இதற்கு ஒப்பவில்லை. ஏனெனில் வீரசேனன் நாற்பது வயதைத் தாண்டிவிட்டான். வீரபுரம் தன்னைவிட சக்தி வாய்ந்தது என்று தெரிந்தும் தன் மகளின் வாழ்வு இன்பகரமாக இருக்க வேண்டும் என எண்ணியே துணிந்து இந்துசேனன் தன் மறுப்பைத் தெரிவித்தான்.

வீரசேனன் இதனால் ஆத்திரம் அடைந்து இந்திர புரி மீது படை எடுத்து இந்துவர்மனைப் போரில் தோற்கடித்தான். மன்னனையும் அரசியையும் சிறையில் அடைத்துவிட்டு இந்துமதியைக் கூப்பிட்டு "உன் அழகைக் கண்டு உன்னை நான் மணந்து கொள்ள விரும்புகிறேன். என்னை நீ மணக்கச் சம்மதித்தால் உன் தாய் தந்தையரை விடுதலை செய்து அவர்களது நாட்டையும் அவர்களுக்கே கொடுத்து விடுகிறேன். நீ மட்டும் மறுத்தால் உன் பெற்றோருக்கு விடுதலை கிடையாது. உன்னையும் பலவந்தமாக கல்யாணம் செய்து கொண்டு விடுவேன்" என்றான்.

இந்துமதியோ "உன்னைப் போன்ற கொடியவனைக் கல்யாணம் செய்து கொள்வதை விட ஒரு ராட்சஸனைக் கல்யாணம் செய்து கொண்டால் கூடச் சுகமாக வாழ்வேன்" என்றாள். வீரசேனனோ "உனக்கு ஒரு மாதம் அவகாசம் கொடுக்கிறேன். நன்றாக யோசி"

—பாபநாசம் சாமா—



எனக்கூறி விட்டுப் போனான்.

அப்போது 'டக்'கென ஒரு ராட்சஸன் இந்துமதியின் முன் குதித்து நின்றான். அவன் அவளிடம் "நீ விரும்பியபடி உன்னை மணக்க ராட்சஸனான நான் வந்திருக்கிறேன். அரச குடும்பத்தில் பிறந்த நீ சொன்ன சொல் தவறக் கூடாது" என்றான்.

இந்துமதி ஆச்சரியத்தோடு "நான் சொன்னதைக் கேட்டா வந்தாய்? நான் அந்த வீரசேனனிடமிருந்து தப்பிக்க அப்படிச் சொன்னேனே ஒழிய உண்மையில் ஒரு ராட்சஸனை மணக்க நினைக்கவில்லை" என்றாள்.

அப்போது அந்த அந்த ராட்சஸன் "நீ சொன்ன சொல் தவறக் கூடாது. இந்தக் கரிமுகனை நீ மணந்து கொள்ளவே வேண்டும். அதற்காக நான் எதையும் செய்ய தயார்" என்றான். இந்துமதியும் சற்று யோசித்து விட்டு "சரி. நான் மூன்று நிபந்தனைகள் விதிக்கிறேன். அவற்றின்படி நடக்கத் தயாரா?" என்று கேட்டாள்.

கரிமுகனும் 'ஓ! சொல் நிபந்தனைகளை" என்றான். அவளும் "முதலாவதாக நீ மாமிசம் சாப்பிடக் கூடாது. இரண்டாவது நீ உன் வன்முறைப் போக்கை விட்டுவிட வேண்டும். மூன்றாவது எங்கள் நாட்டில் ஓடும் நதியின் குறுக்கே ஒரு சிறுமலை இருந்து நீரை வேறு பக்கம் திருப்பி விடுகிறது. அந்த மலையை அகற்ற வேண்டும்" என்றாள்.

கரிமுகனும் "நீ மூன்றாவதாகக் கூறியதை ஒரு நொடியில் செய்து விடுவேன். ஆனால் மற்ற இரண்டு நிபந்தனைகளின்படி நடக்கக் கொஞ்ச காலம் பிடிக்கும். ஆனாலும் எல்லாவற்றையும் செய்து விட்டு வந்து உன்னைப் பார்க்கிறேன்" என்று கூறி மறைந்தான்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் நதியின் குறுக்கே இருந்த மலை அகற்றப்பட்டு விட்டது என்பது இந்துமதிக்குத் தெரிந்தது. அதற்கு ஒரு வாரத்திற்குப் பின் கரிமுகன் வந்து இந்துமதியைக் கண்டான். அப்போது கரிமுகன் மிகவும் இளைத்

துப் போயிருந்ததைக் கவனித்த இந்துமதி அதன் காரணத்தைக் கேட்டாள்.

அவனும் "உன் முதலாவது நிபந்தனைபடி நான் மாமிசம் உண்பதை விட்டுவிட்டு காய் கனி கிழங்குகளைச் சாப்பிட்டு வருகிறேன். அதனால்தான்" என்றான். இந்துமதியும் "ஆகா! இதற்காக உன்னைப் பாராட்டுகிறேன். உன்னை மணக்க இனி எந்த ஆட்சேபனையும் இல்லை. நம் விவாகத்திற்குத் தடையாக இருப்பவன் வீரசேனன். அவனை நீ ஒழிக்க வேண்டும்" என்றாள்.

அதைக் கேட்ட கரிமுகன் "இப்போது நான் வன்முறைச் செயல்களைப் புரிவதில்லையே. மேலும் வீரசேனன் எனக்கு எவ்விதத் தீங்கும் செய்யாததால் அவனை நான் தாக்குவது சரியல்லவே" என்றான்.

அதுகேட்டு இந்துமதி "வீரசேனன் கொடியவன். அவனைக் கொல்வதால் மக்களுக்கு நன்மையே ஏற்படும். இது பற்றி யோசித்துப் பார். ஒரு வாரம் கழிந்ததும் நாம் மறுபடியும் சந்திக்கலாம்" என்றாள். கரிமுகனும் "அப்போதும் என் பதில் இதுவாகத்தான் இருக்கும். அந்த வீரசேனன் என்னைத் தாக்கினாலே நானும் அவனைத் தாக்க முடியும்" என்று கூறிவிட்டுப் போனான்.



ஒரு வாரமும் கழிந்தது. இந்துமதி ஒரு நாள் மாலை பூங்காவில் இருந்த போது கரிமுகன் அவளைச் சந்தித்தான். அவனும் "நம் விவாக விஷயமாக என்ன முடிவு எடுத்திருக்கிறாய்? நான் உன் மூன்று நிபந்தனைகளின்படி நடந்து கொண்டாகி விட்டது" என்றான். இந்துமதி அதற்குப் பதில் கூற நினைக்கையில் அங்கு வீரசேனன் வந்து சேர்ந்தான். அவன் கரிமுகனையும் இந்துமதியையும் சேர்ந்து பார்த்ததும் ஆத்திரம் கொண்டான்.

அவன் இந்துமதியிடம் "யார் இந்த ராட்சஸன்? இவனிடம் அப்படி என்ன சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தாய்?" என்று கேட்டான். இந்துமதியும் "இவனும்



அவன் அலக்காகத் தூக்கி 'கிர்' 'கிர்'ரென்று சுற்றித் தூர விட்டெறிந்தான். வீரசேனன் தலை உடைந்து விழுந்து இறந்தான்.

வீரசேன்னை ஒரு ராட்சஸன் கொன்று விட்டான் என்று கேட்டதும் அவனது படைகள் பயந்து போய் வீரபுரத்திற்கு ஓடி விட்டன. இந்துமதி ராட்சஸனோடு சிறைச் சாலைக்குச் சென்று தன் தாய் தந்தையரைச் சிறையிலிருந்து விடுவித்தாள். அவள் நடந்ததை எல்லாம் தன் பெற்றோர்களிடம் கூறினாள். அவர்களோ தம் மகள் ஒரு ராட்சஸனையா மணக்க வேண்டிய நிலை ஏற்பட்டது என்று எண்ணிக் கவலைப்பட்டார்கள்.

இந்துமதியோ "வீரசேனனைப் போன்ற ராட்சஸகுணம் படைத்த ஒருவனை மணந்து கொள்வதை விட நற்குணங்கள் கொண்ட இந்த ராட்சஸனை மணப்பது எவ்வளவோ மேல். இவன் மாமிசம் சாப்பிடுவது இல்லை. வன்முறைகளைக் கைவிட்டுவிட்டான். முற்றிலும் நல்ல மனிதனாக மாறிவிட்டான்" என்று கூறினாள்.

இந்துவர்மனும் "சரி, உன் இஷ்டம் போல நடக்கட்டும். உனக்கு அழகிய அரசகுமாரனாகத் தேர்ந்தெடுத்து மணம் முடிக்க நினைத்தேன். ஆனால் அது நடக்கக்கூடாது என்பது தெய்வத்தின் விருப்பம் போலும்" என்று கூறிப் பெருமூச்சு

உன்னைப் போல என்னை மணந்து கொள்ள விரும்புகிறான். ஆனால் உன்னைப் போல் அவன் என்னை நிர்பந்திக்கவில்லை. நானே இஷ்டப் பட்டு இவனை மணக்க வேண்டும் என்றே விரும்புகிறான்" என்றாள்.

அதைக்கேட்ட வீரசேனன் கோபம் கொண்டு கரிமுகனைப் பார்த்து "அடே ராட்சஸப் பதரே! என்னோடா போட்டி போடுகிறாய்? உன்னை இப்போது என் வாளுக்கு இரையாக்குகிறேன் பார்" என்று கூறித் தன் வாளை உருவி ராட்சஸனைத் தாக்கினான். தன்னை வீரசேனன் தாக்குவதை கண்டதும் கரிமுகன் அவனது கையைப் பிடித்துத் திருகி வாளைத் தரை மீது விழச் செய்தான். பிறகு வீரசேனனை

விட்டான். இந்துமதியின் விவாகத்திற்கான நாளும் குறிக்கப்பட்டது.

குறிப்பிட்ட நாளில் இந்துமதிக்கும் கரிமுகனுக்கும் விமரிசையாக விவாகம் நடந்தது. அப்போது எல்லோரும் ஆச்சரியப்படும் விதத்தில் ஒரு சம்பவம் நிகழ்ந்தது. திருமணம் முடிந்ததும் அதுவரை ராட்சஸனாக இருந்த கரிமுகன் திடீரென அழகிய அரச குமாரனாக மாறிவிட்டான்.

இதென்ன அதிசயம் என்று எல்லோரும் திகைக்கையில் அவன் அவர்களைப் பார்த்துக் கூறலானான். "நான் உண்மையில் ராட்சஸன் அல்ல. நான் மரகதபுர மன்னன் மாணிக்கவர்மனின் மகன் மரகதவர்மன். ஒரு நாள் ஒரு தேவ கன்னிகை என்னைக் கண்டு என் அழகில் மயங்கி என்னைத் தன்னோடு தேவலோகத்திற்கு வரும்படி அழைத்தாள். நான் மறுக்கவே உடனே ராட்சஸனாக நான் மாறிவிடவேண்டும் என்று சபித்தாள். நான் அவளிடம் "ஒரு குற்றமும் புரியாத எனக்கு இப்படி ஒரு சாபமா?" என்று கேட்டேன். அவளும் "நான் சாபம் கொடுத்ததைத் திரும்பப் பெற முடியாது. அதற்கு மாற்று கூற முடியும். உன்னை விரும்பி ஒரு அரசகுமாரி மணந்து கொண்டால் நீ பழைய படி அரசகுமாரனாகி விடுவாய். அதுவரை இந்த ராட்சஸ உருவம் உனக்கு இருக்கும்" என்று கூறி மறைந்து போனாள். அதன் பிறகு நடந்தது தான் உங்களுக்குத் தெரியுமே".

அரசகுமாரன் மரகதவர்மன் இவ்வாறு கூறியது கேட்டு இந்துமதியும் அவளது பெற்றோரும் மகிழ்ந்து போயினர். மரகதவர்மன் இந்துமதியை அழைத்துக் கொண்டு மரகதபுரத்திற்குச் சென்றான். தன் தந்தைக்குப் பின் மரகதபுரத்தின் மன்னனாக ஆனதோடு இந்துவர்மனுக்குப் பின் இந்திரபுரத்திற்கும் மன்னனாகி சுகமாக வாழ்ந்தான்.



# ஒழுங்காய் இருப்பான்!

தவளகிரி மன்னனின் பொக்கிஷதாரன் லஞ்சம் வாங்குபவன், பொய்க் கணக்கு எழுதிப் பணத்தைத் தன் சொந்த உபயோகத்திற்குப் பயன்படுத்துபவன் என்று பெயர் பெற்று விட்டான். அவன் அப்பதவியில் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து இருந்து வந்தான்.

ஒரு நாள் மன்னன் அவனை அழைக்கவே எல்லோரும் பொக்கிஷதாரனின் சீட்டு கிழியப் போகிறது என்று நினைத்தனர். மன்னர் பொக்கிஷதாரனிடம் "நீ பெரும் தவறு செய்திருக்கிறாய். மறுபடியும் நீ தவறு செய்தால் உன்னை வேலையிலிருந்து நீக்கி விடுவேன்" என்று எச்சரித்து அனுப்பினான்.

இதைக் கண்ட ராணி மன்னனிடம் "நீங்கள் அவனை வேலையிலிருந்து நீக்கி விடுவீர்கள் என நினைத்தேன். அவன் பொய்க் கணக்குதானே எழுதினான்" என்றாள். மன்னனும் "இப்போது இவனுக்கு வயதாகி விட்டது. தன் அவலட்சமான இரு மகள்களுக்கும் திருமணம் செய்து விட்டான். தனக்கும் ஒரு வீட்டையும் கட்டிக் கொண்டு விட்டான். நான் இப்போது எச்சரித்து அனுப்பியதால் இனி ஒழுங்காக இருப்பான். இந்தத் தள்ளாத வயதில் வேறு எங்கும் தனக்கு உத்தியோகம் கிடைக்காது என்பதை அவன் அறிவான். இவனை விலக்கி விட்டு புதியவனை நியமித்தால் அவன் பொய்க் கணக்கு எழுதமாட்டான் என்பது என்ன நிச்சயம்?" என்றான்.

ராணி அதைக்கேட்டுத்திருப்தி அடைந்தாள்.






*[ஆஸ்தான சோதிடர் கூறியபடி வசந்த மாளிகையில் விடப்பட்ட தம் மகளைக் காண மன்னனும் ராணியும் சென்றனர். அப்போது அவள் அங்கே இல்லாமல் எப்படியோ மாயமாய் மறைந்து விட்டாள் எனக் கண்டு மனம் ஒடிந்து அரண்மனைக்கு அவர்கள் திரும்பி வந்தனர். அவர்கள் சேனாதிபதி உக்கிரசேனனிடம் அதுபற்றிக் கூறினர். அதன்பிறகு—]*

வீரசேன மன்னன் தர்பாரைக் கூட்டினான். அமைச்சர்களும், படைத்தலைவர்களும், மண்டலாதி பதிகளும், ஆலோசகர்களும் அங்கு வந்து அமர்ந்திருந்தனர். மன்னன் அவர்களுக்கு இளவரசி வித்தியா வதி எப்படி மாயமாய் மறைந்தாள் என்பதை விளக்கினான். அதைக் கேட்டு சபையோர் தமக்குள் பல விதமாய்த் தாழ்ந்த குரலில் பேசிக் கொள்ளலானார்கள்.

அப்போது ஒரு ஆலோசகன் எழுந்து "அரசே! இளவரசியை வசந்த மாளிகையில் தக்க பாது காப்பு இல்லாமலும், கிழத்தாதியுட னும் விட்டு வந்தீர்கள். அவர்களுக்கு உணவு எடுத்துச் சென்றவர்கள்கூட ஒரு நிமிடம் கூட அதிகம் தங்கக் கூடாது எனக்கூறி உடனே திரும்பி விடும்படியும் கட்டளை இட்டீர்



கள். இப்படி எல்லாம் உங்களைச் செய்ய வைத்தவர் ஆஸ்தான சோதிடர் வாசஸ்பதி. அவர் இப்படிச் சொல்ல காரணம் என்னவாம்?'' என்று கேட்டான்.

அப்போது மன்னன் ''நம் ஆஸ்தான சோதிடர் தம் நண்பரான ஜகந்நாதருடன் சேர்ந்து இளவரசியின் ஜாதகத்தைப் பார்த்து கிரகங்கள் வக்கிரத்துக் கொண்டு இருப்பதைக் கண்டே இந்த ஏற்பாடுகளைச் செய்யச் சொன்னார். அவர் பல்லாண்டுகளாக நம்மிடம் விசுவாசத்துடன் ஊழியம் புரிபவர். அவர் மீது களங்கம் கற்பிப்பது சரியல்ல'' என்றான்.

அப்போது அந்த ஆலோசகன் ''அது சரி. அந்த ஜகன்நாதன் யார்? எங்கிருந்து வந்தவர்? இப்போது எங்கே இருக்கிறார்?'' என்று கேள்விகளை அடுக்கினான். மன்னனும் ''அவர் நம் ஆஸ்தான சோதிடரின் நண்பர். நம் சோதிடர் முக்கியமான விஷயங்களில் அவரைக் கலந்து ஆலோசிப்பார்'' என்றான்.

சபையில் எடுக்கப்பட்ட முடிவின் படி இளவரசி காணாமல் போன விஷயம் நாடெங்கும் அறிவிக்கப் பட்டது. அது கேட்டுப் பலர் இப்படியும் அநியாயம் நடக்குமா என்று ஆத்திரப்பட்டனர்.

ஆஸ்தான சோதிடர் வாசஸ்பதி ஓடோடி வந்து மன்னனைக் கண்டார். அவர் ''நான் தர்பாரில் நடந்ததை எல்லாம் கேள்விப்பட்டேன். இளவரசி காணாமல் போய் விட்டாளாமே. இது உண்மையா?'' என்று கேட்டார். மன்னனும் ''ஆம். உண்மைதான் நடந்தது என்னவோ நடந்து விட்டது. அதையே நினைத்து வருத்தப்படுவதால் என்ன பயன்? வித்தியாவதி எந்தவித ஆபத்திலும் அகப்படாமல் பத்திரமாக இருக்கிறாளா என்பதே முக்கியம். அவளைக் கண்டுபிடித்து மீட்டு வரவேண்டும். இதை எப்படிச் செய்வது என்பது பற்றித்தான் யோசிக்க வேண்டும். அவள் நலமாக இருக்க வேண்டும் என்று தாங்கள் அவளை வசந்த மாளிகையில் வாழச் சொன்னீர்கள். ஆனால் அங்கு நாம் சற்றும் எதிர்பாராதது நடந்து விட்டது.

இப்போது அவள் எங்கே இருக்கிறாள் என்பதைக் கண்டு சொல்லுங்கள்'' என்றான்.

ராணியும் ''வித்தியாவதி அறியாப் பெண். அவளுக்கு எந்த ஆபத்தும் வந்து விடவில்லையே. அவளது ஜாதகத்தைப் பார்த்துச் சொல்லுங்கள்'' என்று கண்ணீர் மல்க வேண்டினாள்.

வாசஸ்பதியும் ''கவலைப்படாதீர்கள். வித்தியாவதிக்கு எவ்வித ஆபத்தும் சந்திர கிரகணம் பிடிப்பது போல இப்போது அரசகுமாரிக்கு தற்காலிகமாக ஏதோ இடைஞ்சல் ஏற்பட்டுள்ளது. கிரகணம் பிடித்துச் சற்று நேரத்தில் விட்டு விடுவது போல வித்தியாவதிக்கு இப்போது ஏற்பட்டுள்ள இன்னலும் மறைந்து விடும். நான் இளவரசியின் ஜாதகத்தை நன்கு பரிசீலித்து பார்த்து விட்டு மறுபடியும் தங்களைச் சந்திக்கிறேன்'' என்று கூறி விட்டு விடை பெற்றுக் கொண்டு சென்றார்.

தம் வீட்டை அடைந்த வாசஸ்பதி இளவரசியின் ஜாதகத்தை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தார். வெகுநேரம் வரை அவர் அந்த ஜாதகத்தின் கிரக நிலையைக் கவனித்துப் பார்த்தார். அவர் தம் நண்பர் ஜகன்நாதர் வருவாரா என்று அவ்வப்போது தலை நிமிர்ந்து பார்த்தார். ஆனால் அவர் வராது போகவே மறுநாள் வருவார் என



எதிர்பார்த்தார். மறுநாளும் வரவில்லை. அதற்கு அடுத்த நாளும் வரவில்லை. அவர் தம்மிடம் கூடச் சொல்லாமல் எங்கே போயிருப்பார் என வாசஸ்பதி ஆச்சரியப்படலானார்.

தானும் ஜகன்நாதருமாக இளவரசி எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்று மன்னனிடம் கூறியதை அவர் மீண்டும் யோசித்துப் பார்க்கலானார். அவர் அப்போது ஜகன்நாதரின் பிறப்பு வளர்ப்பு பற்றி நினைத்து பார்க்கலானார்.

ஜகன்நாதர் அரச குடும்பத்தில் பிறந்தவர். ஜகன்நாதரின் பாட்டனார் கைலாசநாதர். அவர் இமகிரி மன்னர் திரிலோகநாதரின் தம்பி. திரிலோகநாதருக்குக் குழந்தையே



கண்டார். அவர்களோடு பேசி மனிதனின் வாழ்வில் விதி எப்படி விளையாடுகிறது எனத் தெரிந்து கொண்டார்.

கைலாசநாதரின் மகன் கஜநாதர். அவரும் சோதிட சாஸ்திரத்தைக் கரைத்துக் குடித்த நிபுணர். எனவே அவர் தம் மகனான ஜகன்நாதருக்கும் சோதிட சாஸ்திரத்தை நன்கு போதித்தார். அதுமட்டுமல்ல அவர் காட்டுவாசிகளிடமிருந்தும் மந்திர வாதிகளிடமிருந்தும் பல மந்திர தந்திர மாயா ஜாலங்களை எல்லாம் தெரிந்து வைத்திருந்தார். அவற்றையும் தம் மகன் ஜகன்நாதருக்கு அவர் கற்றுக் கொடுத்தார்.

தன் பாட்டானரும், தந்தையும் காட்டில் நிர்மாணித்து வசித்த மாயமாளிகையையே மேலும் பெரிதாக்கி அதில் இருந்து கொண்டு தான் கற்ற மந்திர, மாயா ஜாலங்களை எல்லாம் பரீட்சித்துப் பார்த்து வரலானார். இவற்றோடு அவர் திருப்திப்படவில்லை. அவர் மனம் எப்படியாவது ஏதாவது ஒரு நாட்டிற்கு மன்னனாகிவிட வேண்டும் என்றே துடித்துக் கொண்டிருந்தது. அப்படி எந்த நாட்டின் மன்னனாக ஆகும் வாய்ப்பு கிடைக்கும் என அவர் பார்த்துக் கொண்டே இருந்தார். அப்போது அவருக்கு வீர புரம் பற்றிய விவரம் தெரிய வந்தது. அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர்

பிறக்காததால் அவருக்குப்பின் தான் தான் இமகிரியின் சிம்மாசனத்தை அடையப் போவதாக கைலாச நாதர் ஆசை கொண்டிருந்தார். ஆனால் திரிலோகநாதர் இறந்ததும் அவரது சகோதரியின் மகன் உமாநாதன் இமகிரியின் மன்னாக முடி சூட்டப்பட்டான். கைலாச நாதர் நாடு கடத்தப்பட்டார்.

அவர் காடுகளில் தலைமறைவாக இருக்கலானார். தனக்கு திடீரென இம்மாதிரி நிகழ்ந்தது கண்டு அவர் மனம் விரக்தி அடைந்து அதனால் தன் மனதை ஏதாவது ஒன்றின் பக்கம் திருப்பிவிட அவர் சோதிட சாஸ்திரத்தை நன்கு படிக்கலானார். அவர் பல இடங்களுக்குப் போய்ப் பல சோதிடர்களைக்



திட்டமிட்டார்.

வீரசேனனின் புதல்வி வித்தியாவதி வசந்த மாளிகையில் எவ்விதக் காவலும் இல்லாமல் ஒரு கிழப் பணிப் பெண்ணுடன் இருப்பதை அவர் அறிந்தார். அவர் வாசஸ்பதியோடு தொடர்பு கொண்டு அரசகுமாரிக்கு விவாக யோகம் வரும் காலத்தை அறிந்து கொண்டார். தான் வித்தியாவதியை மணந்து கொண்டால் வீரபுரத்தின் மன்னனாகி விடலாம் என்ற எண்ணம் அவர் மனதில் நிலை கொண்டு விட்டது.

இக்காரணத்தால் அவர் வசந்த மாளிகைக்கு யாருக்கும் தெரியாமல் போய் அதன் சுற்றுப்புறத்தை நன்கு பார்த்துக் கொண்டார். எங்கு எந்த வழி உள்ளது என்பதைப் பார்த்துக் கொண்டார். அவர் மரங்களுக்கிடையே செல்லும் ஒரு வழியைத் தேர்ந்தெடுத்தார். அது சாரஸசரோவரில் முடியும் இடத்தில் ஒரு படகை மறைத்து வைத்தார்.

அந்தப் படகில் இளவரசியை ஏற்றிக் கொண்டு போய்க் காட்டிலுள்ள மாய மாளிகையில் அவளை வைத்து விட்டு தக்க சமயத்தில் அவளை மன்னனிடம் அழைத்துச் செல்வது என ஜகன்நாதர் நினைத்தார். காணாமல் போன தன் மகள் திரும்பி வந்ததால் மகிழ்ச்சி அடைந்து மன்னன் அவளைத் தனக்கே விவாகம் செய்து வைத்து விடுவான் என அவர் நம்பினார்.

இப்படி ஜகன்நாதர் திட்டமிட்டிருக்கிறார் என்பது வாசஸ்பதிக்கு தெரியவே தெரியாது. அதனால் தான் அவர் மூன்று நாட்கள் வரை ஜகன்நாதர் வருவார் என எதிர்பார்த்தார். அவர் வராது போகவே வாசஸ்பதி மன்னனைக் காண நான்காவது நாள் அரண்மனைக்குச் சென்றார்.

அப்போது உக்கிரசேனன் மன்னனிடம் இளவரசியைத் தேட வீரர்களை எங்கெல்லாம் அனுப்பியுள்ளதை விவரமாகக் கூறிக் கொண்டிருந்தான். வாசஸ்பதியைக் கண்டதும் மன்னன் "ஜாதகத்தை நன்கு பார்த்தீர்களா? வித்தியாவதி க்ஷேமமாகத்தானே இருக்கிறாள்?" என்று

கேட்டான்.

வாசஸ்பதியும் "அரசே! கவலைப்பட வேண்டாம். ஜாதகப் படி அரசகுமாரிக்கு எவ்வித ஆபத்தும் நேர்ந்து விடவில்லை. அவள் பத்திரமாக நம் நகருக்கு மேற்கு திசையில் எங்கோ ஓரிடத்தில் இருக்க வேண்டும் என்றே தெரிகிறது. எனவே அத்திசையில் அதிக ஆட்களை அனுப்புவது நல்லது" என்றார்.

அதுகேட்டு உக்கிரசேனன் "நம் நகரின் மேற்குப் பக்கத்தில் மலைகளும் அடர்ந்த காடுகளும் அல்லவா உள்ளன? அங்கும் நம் வீரர்கள் எவ்வளவு தூரம் போக முடியுமோ அவ்வளவு தூரம் போய்த் தேடி விட்டு வந்திருக்கிறார்கள். வடக்குப் பக்கம் சென்ற வீரர்கள் மட்டும் இன்னமும் வரவில்லை" என்று கூறினான்.

மன்னனும் "அவர்கள் வந்த பிறகு நாம் மறுபடியும் பல வீரர்களை நம் சோதிடர் கூறியபடி மேற்குத் திசையில் அனுப்பித் தீவிரமாகத் தேட சொல்வோம். அது சரி. யாரோ ஒரு வாலிபன் வித்தியாவதியைத் தேட என் அனுமதி கேட்க வந்திருப்பதாகக் கூறினாயே? அவன் தன்னோடு சில வீரர்களையும் துணைக்கு அனுப்பும்படிக் கேட்கிறானா?" என்று கேட்டான்.

உக்கிரசேனனும் "இல்லை அரசே! அவனுக்கு வீரர்களின்



துணை வேண்டாமாம். தனியாகவே போய் வித்தயாவதியைத் தேடிக் கண்டுபிடிக்கப் போகிறானாம். அதில் தான் வெற்றி பெறுவது உறுதி என அவன் நம்புகிறான். ஒருவேளை தான் இறந்து விட்டால் தன் கிழத் தாயை நாம் பாதுகாத்து வர வேண்டும் எனக் கோருகிறான்" என்றான்.

மன்னனும் "அப்படியா! அவன் தனியாகவே போகிறானாமா? துணிச்சல்காரன்தான்" என்று கூறினான். எனவே உக்கிரசேனனும் "அரசே! அவன் எல்லோரையும் போல இல்லை. அவனுக்கு நாம் ஒரு சந்தர்ப்பம் அளித்துப் பார்க்கலாம். இதனால் நமக்கு நஷ்டம் எதுவும் இல்லை. அவன் அம்

முயற்சியில் வெற்றி பெற்றால் நமக்குத்தான் லாபம். அவனது உறுதியைப் பார்த்தால் அவன் கண்டிப்பாக வெற்றி பெறுவான் என்றே தெரிகிறது'' என்றான்.

மன்னனும் "அப்படியா! அவன் எங்கே இருக்கிறான்? அவனை நான் பார்க்க வேண்டும்'' என்றான். உக்கிரசேனனும் "அவன் நம் அரண்மனை வாசலில்தான் தங்கள் அனுமதிக்காக காத்து நிற்கிறான். அவனை இப்போதே அழைத்து வரும்படிக் கூறுகிறேன்'' என்றான்.

உக்கிரசேனன் ஒரு வீரனிடம் அந்த இளைஞனை அழைத்து வரும்படிக் கூறினான். அப்போது மன்னன் வாசஸ்பதியிடம் "உங்கள் நண்பர் ஜகன்நாதரை அழைத்து வரவில்லையா?'' என்று கேட்டான். வாசஸ்பதியும் "என்ன காரணமோ தெரியவில்லை. அவர் மூன்று நாட்களாக என்னைக் காணவே வரவில்லை. தினமும் என்னைக் காண வருபவர் தொடர்ந்து மூன்று நாட்களாக வரவில்லை என்றால் அது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. ஏதாவது அவசரமான வேலையைக் கவனிக்கப் போயிருக்கிறாரோ. அவர் வந்ததும் தங்களிடம் அனுப்பி வைக்கட்டுமா?'' என்று கேட்டார்.

மன்னனும் "வேண்டாம். வேண்டாம். அவரும் தங்களுடன் சேர்ந்து வித்தியாவதியின் ஜாதகத்தைப் பார்த்தாரோ என்று நினைத்துத்தான் கேட்டேன்'' என்றான். சோதிடரும் அங்கிருந்து செல்ல முயல்கையில் ஒரு வீரன் ஒரு வாலிபனை அழைத்து வந்து மன்னன் முன் நிறுத்தினான்.

வாசஸ்பதி அந்த இளைஞனின் முகத்தைப் பார்த்து திகைத்து நின்றார். அவனது கண்களில் அலாதியான ஒளி வீசியது. முகத்தில் அபூர்வக்களை சொட்டியது. இந்தத் துணிகர வாலிபன் யார் என யோசித்தவாறே அவர் அங்கிருந்து சென்றார்.

(தொடரும்)






# வேண்டாம் ராஜகுமாரன்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத 'விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கி செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நடு நிசியில் நீ முடிக்க நினைத்த வேலை உன் சக்திக்கு உட்பட்டதா என்று நினைத்துப் பார்த்தாயா? அப்படி இருந்தால்தான் உன்னால் நீ நின்னைத்த வேலையைச் செய்ய முடியும். இல்லாவிட்டால் உனக்கு பெருத்த அவமானமே ஏற்படும். ஒருவன் தன் சக்தியையும் அந்தஸ்தையும் உணர்ந்து அதற்கு ஏற்ப செயல்பட்டால் அவன் செய்யும் வேலை வெற்றிகரமாக முடியும். இதன் தொடர்பாக சோனாவதி என்பவளின் கதையைக் கூறுகிறேன்.

## வேதாளம் சொல்லும் கதை



கவனமாகக் கேள்" என்று கூறிக் கதையை ஆரம்பித்தது.

இந்திரகிரி என்ற நாட்டில் ஈஸ்வரய்யா என்ற குடியானவன் இருந்தான். அவனது மனைவி பரிமளா. கல்யாணமாகி பல வருடங்களுக்குப் பிறகே அவர்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதன் அழகை அதைப் பார்த்தவர்கள் எல்லாம் பாராட்டினார்கள். அதன் மூக்கும் முழியும் தங்கம் போன்ற உடல் நிறமும் அவளது அழகை உயர்த்திக் காட்டியது. இவ்வளவு அழகிய குழந்தைக்கு ஈஸ்வரய்யா சோனாவதி என்று பெயர் வைத்தான்.

சோனாவதி வளர வளர அவளது அழகும் அதிகரித்துக் கொண்டே போயிற்று. அவளைப் பார்த்த அவளது உற்றார், உறவினர், தோழிகள் யாவரும் "நீ ராஜகுமாரி போலிருக்கிறாய். உன்னை யாராவது ஒரு ராஜகுமாரன்தான் வந்து கொத்திக் கொண்டு போகப் போகிறான்" என்று கூறலானார்கள்.

இப்படி எல்லோரும் சொல்வதைக் கேட்கக் கேட்க சோனாவதியின் மனதிலும் தன்னை ஒரு ராஜகுமாரன்தான் மணக்க வேண்டும் என்ற எண்ணம் நிலைக்கலாயிற்று.

அதே ஊரிலிருந்த ஈஸ்வரய்யாவின் நண்பனான சிவய்யா அவனிடம் "உன் மகள் சோனாவை என் மகன் லிங்கய்யனுக்கு மணம் செய்து வைக்கிறாயா?" என்று கேட்டு வந்தான். ஈஸ்வரய்யாவும் "பார்க்கலாம்" என்று கூறி வந்தான்.

ஒருநாள் லிங்கய்யனே சோனாவதியைச் சந்தித்து "சோனா! உன்னை நான் மிகவும் விரும்புகிறேன். என்னைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா?" என்று கேட்டான். லிங்கய்யனும் இளைஞனே. அழகாகவும் இருந்தான். ஆனால் சோனாதிவதியோ "உன்னை மணந்து கொள்ள எனக்குக் கொஞ்சமும் விருப்பம் இல்லை" என்று வெடுக்கென்று கூறினாள்.

அதைக்கேட்ட லிங்கய்யா மனம் உடைந்து போய் "இதோ பார் சோனா! எனக்கு கல்யாணம் நடக்கும் என்றால் அது உன்னோடுதான்.

தான். வேறு எந்தப் பெண்ணையும் மணக்க மாட்டேன்'' என்றான். சோனாவதி அதற்கு பதில் எதுவும் கூறவில்லை.

சோனாவதி தான் ஒரு ராஜ குமாரனை மணக்கப் போவதால் ராஜ வம்சத்து நடை உடை, பாவனைகளை அறிந்து கொள்ள விரும்பினாள். அதனால் இந்திரபுர ராணியின் அந்தப்புரத்தில் வேலை செய்யும் தன் தோழி ஒருத்தியின் உதவியால் ராணியின் அந்தப்புரத்தில் பணிப்பெண்ணாக வேலை செய்யும் உத்தியோகமும் பெற்று விட்டாள்.



ஒருமுறை ஒரு ஓவியன் ராணியைக் கண்டு ''அரசியாரே! தங்களுக்குச் சமர்ப்பிக்க ஒரு அழகிய ஓவியம் வரைந்து கொண்டு வந்திருக்கிறேன். ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று கூறித் தான் வரைந்த ஓவியத்தை கொடுத்தான். அங்கே நின்ற சோனாவதி அந்த ஓவியத்தை வாங்கி ராணியிடம் கொடுத்தாள்.

அதில் சூரியன் மறையும் காட்சி அற்புதமாக வரையப்பட்டிருந்தது. அதன் வண்ண அமைப்புகளைப் பாராட்டி ராணி அந்த ஓவியனுக்கு ஆயிரம் வராகன்கள் கொடுத்து அனுப்பினாள். பிறகு அவள் சோனாவதியிடம் ''ஓவியம் எப்படி இருக்கிறது?'' என்று கேட்டாள்.

சோனாவதியும் ''நாம் தினமும் பார்க்கும் சூர்ய அஸ்தமனக் காட்சி தானே இது. இதில் குறிப்பிடத்தக்கதாக எதுவும் இல்லையே. இதற்குப் போய் ஆயிரம் வராகன்கள் கொடுத்தது மிக அதிகம்'' என்றாள். அதைக் கேட்ட ராணி சிரித்து ''சோனா! கடவுள் உனக்கு என்னவோ அழகைக் கொடுத்து விட்டார். ஆனால் அழகிய கலைப் பொருள்களை ரசிக்கும்படிச் செய்ய உனக்கு அறிவை கொடுக்கவில்லை. அது மட்டும் அல்ல, நான் கொடுத்த பரிசுத்தொகை என் அந்தஸ்திற்குத் தக்கவாறு தான் என்பதையும் நீ உணரவில்லை'' என்றாள்.

ஒரு நாள் ராஜாவும் ராணியும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கும் போது சோனாவதி வெண் சாமரம் வீசிக் கொண்டிருந்தாள்.



அப்போது ஒரு ஒற்றன் வந்து "அரசே! நம் அண்டை நாட்டு மன்னன் நம் நாட்டின் மீது படை எடுத்து வந்து கொண்டிருக்கிறான்" எனக்கூறிவிட்டுப் போனான்.

அதைக் கேட்ட சோனாவதி பயந்து நடுங்கித் தன் கையிலி ருந்த வெண்சாமரத்தைத் 'தொப்' பென்று கீழே போட்டாள். ராணி ஏதோ யோசனையில் ஆழ்ந்தாள். ராஜாவோ "இந்தப் படைஎடுப்பு நான் எதிர்பார்த்ததுதான். எதிரியை எதிர்க்க நம் படைகள் நம் எல்லை யில் தயாராக உள்ளன" என்று கூறி விட்டு சோனாவதியைப் பார்த்து "படை எடுப்பு என்ற சொல்லை கேட்டதும் பயந்து விட்டாயே அரண்மனையில் வேலை செய்யும் நீயே இப்படி பயந்தால் மற்றவர் கள் நிலை என்ன? இப்படி எல்லாம் கேட்கும் போது தைரியமாக இருக்க நீ பழகிக் கொள்ள வேண்டும்" என்றான்.

ஒரு நாள் ராணி காட்டிற்கு உல்லாச பயணமாகக் கிளம்பினாள். அவளோடுப் பெண்களும் கிளம் பினார்கள். ஆனால் சோனாவதி மட்டும் தனக்கு உடம்பு சரியில்லை எனக்கூறிப் போகவில்லை. உண் மையில் அவள் உடல்நலம் ஒன்றும் கெட்டிருக்கவில்லை. அவள் ராணி இல்லாத போது ராணியின் புடவை யைக் கட்டிக் கொண்டும் நகை களைப் போட்டுக் கொண்டும் தன் அழகைக் கண்ணாடியில் பார்க்க விரும்பினாள். அதற்கு நல்ல வாய்ப்பு கிடைக்கவே, அவள் ராணி யோடு செல்லவில்லை.

ராணி அரண்மனையை விட்டுப் போனதுமே சோனாவதி ராணியின் அறைக்குள் சென்று ராணியின் விலையுயர்ந்த புடவையை எடுத்து உடுத்துக் கொண்டும் அவளது நகை களை அணிந்து கொண்டும் நிலைக் கண்ணாடி முன் நின்று அழகு பார்த்துக் கொண்டிருந்தாள்.

அப்போது திடீரென ஒரு இளை ஞன் அங்கு வந்தான். அவன் சோனா வதியின் அழகைப் பார்த்துவிட்டு "நீ யார்? எந்த தேசத்து ராஜ குமாரி?" என்று கேட்டான். சோனா வதியும் மிடுக்காக "நான் மரகத

புரி இளவரசி மாலினி, நீங்கள் யாரோ?'' என்று கேட்டாள்.

அவனும் ''நான் இந்நாட்டு இள வரசன். குருகுலத்தில் என் படிப்பை முடித்துக் கொண்டு இன்றுதான் வந்தேன். உன் அழகு என்னை மயக்கி விட்டது. நான் உன்னை மணந்து கொள்கிறேன். இதற்காக உன் பெற்றோரிடம் முறைப்படிப் பெண் கேட்கச் சொல்கிறேன்'' என்றான்.

விஷயம் முற்றுவதற்கு முன் தடுக்க நினைத்து சோனாவதி ''இள வரசே! என்னை மன்னித்து விடுங்கள் நான் அரசகுமாரி அல்ல. உண்மையில் இங்கு பணிபுரிபவள். ஏதோ விளையாட்டிற்கு தாங்கள் இன்னாரெனத் தெரிந்து கொள்ளாமல் பொய் சொல்லிவிட்டேன்'' என்றாள் பயந்தவாறே.

அதுகேட்டு இளவரசன் புன்னகை புரிந்து ''பயப்படாதே. குப்பையில் கிடக்கும் மாணிக்கத்தைக் கண்டால் அதை எடுத்து உரிய இடத்தில் பத்திரப்படுத்துவேனே யொழிய அதைக் காலால் எட்டி உதைத்து விட்டுப் போய்விட மாட்டேன். நீ ஒரு பணிப்பெண்ணான போதிலும் உன்னை நான் மணக்கத் தயார்'' என்றான்.

அப்போது சோனாவதி ''இள வரசே! நான் ஒரு கேள்வி கேட்கட்டுமா? ஒரு வேளை நான் இந்தத் திருமணத்திற்கு இசையாவிட்



டால் நீங்கள் என்ன செய்வீர்கள்?'' என்று கேட்டாள். இளவரசனும் ''ஒரு பணிப் பெண்ணுக்கு ஒரு இளவரசனை மணக்கக் கசக்குமா? அப்படி ஒரு வேளை நீ மறுத்தால் உலகில் உன்னை விட அழகான பெண் இல்லாமலா போய் விடுவாள்? அவளைக் கண்டுபிடித்து மணந்து கொள்வேன்'' என்றான்.

அப்போது சோனாவதி ''மன்னியுங்கள் இளவரசே! என் திருமணம் என்றோ எனக்குப் பிடித்தமானவருடன் நிச்சயிக்கப்பட்டு விட்டது'' எனக்கூறி அரண்மனையை விட்டு வெளியேறித் தன் வீட்டை அடைந்தாள். பிறகு அவள் லிங்கய்யனை மணந்து கொண்டு சுகவாழ்வு வாழ்ந்தாள்.

வேதாளம் இக்கதையை கூறி "மன்னனே! ஆரம்ப முதல் தன் அழகில் பெருமிதப்பட்டு தான் ஒரு ராஜகுமாரனையே மணக்க வேண்டும் என்று திடமாக எண்ணி வந்த சோனாவதி அத்தகைய வாய்ப்பு கிடைத்த போது அரசகுமாரனை மணக்காமல் ஏன் எளிய குடும்பத்து லிங்கைய்யனையே மணந்து கொண்டாள்? இக்கேள்விக்குத் தக்க விடை தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்துச் சுக்குநூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "சோனாவதி தான் ஒரு ராஜகுமாரனையே மணக்க வேண்டும் என் எண்ணி இருந்தாள். அதற்காக ராஜவம்ச நடை, உடை பாவனைகளைப் பற்றி அறிய அரண்மனைப் பணிப்பெண்ணாகச் சேர்ந்தாள். அவளையே மணக்க விரும்பிய லிங்கைய்யாவின் வேண்டுதலுக்குச் சரியான பதிலும் கூறவில்லை. அவளுக்கு ராஜகுமாரனை மணக்க வாய்ப்பும் கிட்டியது. ஆனால் சோனாவதி அவனிடம் கேட்ட கேள்விக்கு அவன் அளித்த பதிலே அவளது நீண்டகால எண்ணத்தைச் சட்டென மாற்றியது. அவளைவிட அழகி கிடைத்தால் அவளையே மணந்து கொள்வதாகக் கூறவே அவன் அதை அவளை மணந்து கொண்ட பிறகும் செய்வான் ஏன்பது அவளுக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டது. அதனால் ராஜகுமாரனை மணப்பதைவிடத் தன்னை மட்டும் விரும்பும் லிங்கைய்யனை மணப்பதே சரி என நினைத்தே ராஜகுமாரனை நிராகரித்தாள்" என்றான்.

விக்கிரமனின் இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக்கொண்டது.





# இரு புதல்வர்கள்

பர்வதம்மாளின் இரு மகன்கள் சபாபதி, பசுபதி. இவர்களில் சபாபதி பணக்காரன். பசுபதி ஏழை. கணவனை இழந்த பர்வதம்மாள் தன் இருமகன்கள் வீட்டில் ஆறு ஆறு மாதம் வீதம் இருந்து வந்தாள்.

அவள் பசுபதியின் வீட்டில் கடைசியாக இருந்த போது மாரடைப்பால் காலமாகி விட்டாள். இந்த செய்திக் கேட்டதும் சபாபதி தன் குடும்பத்தவரோடு பசுபதியின் வீட்டிற்கு வந்தான். சபாபதி கண்ணீர் வடித்தவாறே பசுபதியிடம் "தம்பீ! நீ கொடுத்து வைத்தவன். அம்மா கடைசி காலத்தில் உன் வீட்டில் இருந்து சிவலோகப் பிராப்தி அடைந்தாள். ஆனால் ஈமச் சடங்குகளுக்காகும் செலவை நான் தான் ஏற்பேன்" என்றான்.

அதைக் கேட்ட ஊரார் "ஆகா! மகன் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும்" எனப் பாராட்டினார்கள். சபாபதியும் பத்து நாட்கள் வரை தன் தாயின் ஈமக்கிரியைகளுக்குச் செலவு செய்தான். முடிவில் தானங்கள் என்று வந்தபோது செலவு செய்த போதிலும் முழுமனதுடன் செய்யவில்லை.

சடங்குகள் முடிந்து பிண்ட உருண்டையைக் காக்கைக்கு வைத்தார்கள். அதனை இறந்த ஆத்மா காக்கை வடிவில் வந்து சாப்பிட்டுப் போகும். அப்போதுதான் இறந்தவர் பூரண திருப்தியுடன் போனதாகக் கருதுவார்கள். அவ்வாறு பிண்ட உருண்டை வைக்கப்பட்ட இடத்தில் ஒரு மரத்தில் பல காக்கைகள் இருந்தும் ஒன்று கூட வரவில்லை.

அப்போது சபாபதியின் தாய் மாமன் "அக்கா! உன் மனவேதனை இதுவா? உன் மூத்த மகன்தான் எல்

—ரேணுகா ரவி—

லாம் செய்கிறான் என்று பாராட்டு கிறார்களே, உன் இளைய மகன் பசுபதியைப் பற்றி ஒரு வார்த்தை கூட யாரும் சொல்லவில்லையே என்றுதானே வருந்துகிறாய்? கவலைப்படாதே பசுபதி உனக்காக எவ்வளவு செய்தான் என்பதனை ஊராருக்கு எடுத்துச் சொல்கிறேன். இப்போது திருப்திதானே. நீ வந்து உன் மூத்த மகன் வைத்த பிண்ட உருண்டையைச் சாப்பிடு'' என்று கூறிக் காக்கைகள் இருந்த மரத்தைக் கை கூப்பி வணங்கினான்.

மறு நிமிடமே முதலில் ஒரு காக்கை வந்து பிண்டத்தைக் கொத்தியது. அடுத்து பல காக்கைகள் வந்து பிண்டத்தில் ஒரு பருக்கை விடாமல் சாப்பிட்டுவிட்டுப் போயின. அது கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள்.

அப்போது பசுபதியின் தாய் மாமன் ''ஒரு தாய் தன் பிள்ளைகளைச் சமமாகத்தான் பார்க்கிறாள். மூத்த மகன் சபாபதி இந்த ஈமக்கிரியைகளுக்கான செலவை ஏற்றான். அதே தொகையை பசுபதி இவ்வூர் அனாதை இல்லத்திற்கு நன்கொடையாக அளித்து ஒவ்வொரு ஆண்டிலும் தன் தாய் நினைவு நாளன்று அனாதைகளுக்குச் சாப்பாடு போடும்படி ஏற்பாடு செய்திருக்கிறான். இது அவன் தன் தாயாரின் ஆத்மா திருப்தி அடையச் செய்த மாபெரும் செயல்'' என்றான்.

அப்போது சபாபதி ''ஆம். நான் கூட ஈமக்கிரியைகளுக்கு அதிகம் செலவு செய்து விட்டதாக எண்ணி மனதிற்குள் வேதனைப்பட்டுக் கொண்டிருந்தேன்'' எனக் கண்ணீர்த் ததும்பக் கூறினான்.

பசுபதியோ ''நீ மேலுலகில் நம் தாயார் நற்கதி பெற செலவு செய்தாய். நான் அவள் பெயர் இவ்வுலகில் நிலைத்திருக்கச் செலவு செய்தேன். எல்லாவகையிலும் இரண்டும் ஒன்றுதான்'' என்றான்.

இது கேட்டு ஊரார் மனம் நெகிழ்ந்தது.



# அம்புலிமாமா அனுபந்தம்—45

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:



## கச்சின் ஊதா நிறக் கொக்கு

குஜராத் மாநிலத்தில் கச் பகுதியில் ப்ளமிங்கோ வகை ஊதா நிறக் கொக்குகள் காணப்படுகின்றன. இப்பகுதியை 'ப்ளமிங்கோ நகரம்' என்று கூறுகிறார்கள்.

இளஞ்சிவப்பு நிறக் கால்களோடு வளைந்து வளைந்து நீண்டிருக்கும் கழுத்து ஊதா நிறத்தில் வெள்ளை நிறமும் கலந்து காணப்படுவது இந்த ப்ளமிங்கோ. இவை வீடுகளில் வளர்க்கப்படும் வாத்துக்களை போன்று இருக்கும் இவை நாலடி நீளம். உறுதியான இளஞ்சிவப்பு நிற மூக்கு பாதிக்கு மேல் முன்புறம் வளைந்திருக்கும். வாத்துக்களின் கால்களைப் போல் இவற்றின் கால் விரல்களும் ஜவ்வு போன்ற தோலால் பிணைக்கப்பட்டிருக்கும். இவை நீரில் ஆழமில்லாத இடங்களில் தம் தலைகளை அமிழ்த்தித் தம் உணவைத் தேடிப் பிடிக்கும். தன் வளைந்த மூக்கால் தரையைக் குத்தி அதிலிருந்தும் தன் உணவை இது அடையும். இதன் நாக்கு சல்லடை போல இருக்கும்.

குளங்களிலும் ஏரிகளிலும் இவை சிறு கூட்டங்களாக வசிக்கின்றன. வான வீதியில் இவை தம் இறக்கைகளை கவட்டை கம்பு போல விரித்துப் பறக்கும். ஒவ்வொரு ஆண்டும் அக்டோபரிலிருந்து மார்ச் மாதத்துள் கச் பகுதியில் சுமார் 5 லட்சம் ப்ளமிங்கோக்கள் கூடுகின்றன. உலகிலேயே மிகப் பெரிய அளவில் ப்ளமிங்கோ முட்டையிட்டுக் குஞ்சு பொரிப்பது இப்பகுதியில்தான்.

செய்திகளில் சிறுவர்கள்:

# இளம்பிள்ளை கோல்ப் ஆட்டக்காரர்!

கோல்ப் விளையாட்டு பெரிய பணக்காரர்களின் பொழுதைப் போக்கும் விளையாட்டு எனக் கருதப்படுகிறது. இந்த விளையாட்டில் கூடச் சிறுவர்கள் தம் திறமையை வெளிப்படுத்தியுள்ளனர்.



ஷிபின் என்ற சிறுவன் தன் தந்தையுடன் கோல்ப் மைதானத்திற்குச் சென்றான். பரந்த பட்டுப் போன்ற புல்வெளி மைதானத்தைக் கண்டு அது ஓட்டத்திற்கு ஏற்ற இடம் என்று அவன் நினைத்தான். ஆனால் அதில் விளையாடுபவர்கள் சிறிய வெள்ளை நிறப் பந்தை அடித்து விட்டு ஓடாமல் நடந்து போய் அப்பந்தை அதனருகே உள்ள குழிக்குள் நிதானமாகத் தள்ளி பாயிண்ட்கள் எடுப்பதை அவன் கண்டான். அந்த விளையாட்டை விளையாட வெகுநேரம் பிடித்தாலும் ஷிபினுக்கு அது மிகவும் பிடித்துப் போயிற்று. அது முதல் அவன் தந்தையோடு அவ்வப்போது கோல்ப் மைதானத்திற்குச் சென்று வரலானான்.

தன் மகனுக்கு கோல்ப் விளையாட்டில் ஆர்வம் உள்ளது கண்டு அவனது தந்தையே அவனுக்கு அந்த ஆட்டத்தைக் கற்பிக்கலானார். தந்தையிடம் ஐந்தாண்டுகள் கற்று ஷிபின் ஜுனியர் சாம்பியன் ஆனான். தன் ஒன்பதாவது வயதில் உலகப் போட்டியில் முதல் முதலில் கலந்து கொண்டான். இந்தோனேஷியாவின் ஜாகர்தாவில் நடந்த பனிரெண்டாவது ஆசிய பசிபிக் ஜூனியர் சாம்பியன்ஷிப் போட்டிகளில் கலந்து கொண்டான். இதில் ஐந்து நாடுகளைச் சேர்ந்த பனிரெண்டு சிறுவர்கள் கலந்து கொண்டார்கள். ஷிபின் இதில் பத்தாவதாக வந்தான்.

சென்ற ஆண்டு நடந்த ஒன்பதாவது டோபோலீஸ் ஜுனியர் உலகக் கோப்பை சாம்பியன் போட்டிகளில் இந்தியாவிற்காக ஷிபின் கலந்து கொண்டான். இவனோடு மேலும் மூன்று இந்தியச் சிறுவர்களும் அப்போட்டிகளில் கலந்து கொண்டனர். பதினெட்டு நாட்டு சிறுவர்கள் கலந்து கொண்ட இப்போட்டியில் ஷிபின்தான் வயதில் மிகச் சிறியவன். ஒரு இத்தாலியப் பத்திரிகை பிகொல்லோ (குள்ளன்) என இவனைப் பாராட்டி புகழ்ந்தது.

புதுடில்லியில் நடந்த பதிமூன்றாவது ஆசிய பசிபிக் ஜூனியர் சாம்பியன் போட்டிகளில் ஷிபின் வெள்ளிப் பதக்கம் வென்றான். ஜூலையில் நடக்கும் ஜான் டிகோ உலக சாம்பியன் போட்டிகளில் இவன் கலந்து கொள்ளப் போகிறான். கல்கத்தாவில் நடந்த சப்ஜூனியர் சாம்பியன் போட்டிகளில் தேசிய சப்ஜூனியராக விளங்கினான். இந்த கௌரவம் பெற்ற மிகச் சிறிய வயதினன் இவனே.

# உங்களுக்குத் தெரியுமா?

1. நம் நாட்டின் மிகப் பழமையான இரண்டாவது நூல் எது?
2. பரசுராமர் எந்த வம்சத்தில் பிறந்தார்?
3. ஜூடாஸ் ஏசுநாதருக்கு எந்த பூங்காவில் துரோகம் இழைத்தான்?
4. பாரதத் துணை குடியரசுத் தலைவராக பத்தாண்டு காலம் பதவி வகித்தவர் யார்?
5. இந்திய தேசிய காங்கிரசின் ஆரம்பப் பெயர் என்ன?
6. ஹர்ஷ சக்கரவர்த்தியைக் கொன்ற அவரது மந்திரி யார்?
7. சக ஆண்டு எப்போது எதனைக் குறிக்க ஆரம்பமாயிற்று?
8. புராணங்களில் மகாவிஷ்ணு முதலையிலிருந்து காப்பாற்றியதாகக் கூறப்படும் யானையின் பெயர் என்ன?
9. ஜூலியன் காலண்டர் யாரால் துவக்கப்பட்டது?
10. வடநாட்டு பாய்தூஜ் பண்டிகை போலத் தமிழ் நாட்டில் கொண்டாடப்படும் பண்டிகை எது?
11. ஒரு புகழ் பெற்ற விளையாட்டை முன்பு 'பூனா' என்றனர். தற்போது அது எது?
12. கல்கத்தாவில் ஒரு இனத்தவர் புறாப் போட்டி நடத்துகிறார்கள். அவர்கள் யார்?
13. ஹர்ஷ சரிதத்தை எழுதியவர் யார்?
14. நாகார்ஜுன சாகர் எந்த நதியில் கட்டப்பட்டுள்ளது?
15. மகாபலிபுரத்தை நிர்மாணித்தவர் யார்?

## விடைகள்

1. யஜுர் வேதம்.
2. பிருகு வம்சம்.
3. கோத்ஸ்மெஸ்.
4. டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்.
5. இந்திய தேசிய யூனியன்.
6. அர்ஜுனன்.
7. கி.பி. 78-ல் கனிஷ்கரின் பட்டாபிஷேகத்தின் நினைவில்.
8. கஜேந்திரன்.
9. ஜூலியஸ் சீஸர்.
10. காணும் பொங்கல்.
11. பாட்மிண்டன்.
12. சீனர்கள்.
13. பாணபட்டர்.
14. கிருஷ்ணா நதி.
15. நரசிம்ம வர்மர்.

# அம்புலிமாமா செய்திகள்



## விண்வெளிச் சாதனை

ரஷ்ய விண்வெளி வீரர்கள் எம். ஐ. ஆர் விண்வெளி நிலையத்தில் ஒரு மாதம் இருந்து விட்டு வந்தார்கள். ஆனால் சென்ற மே மாதம் விண்வெளியில் அமெரிக்க ஸ்பேஸ் ஷட்டில் எண்டவரில் கமாண்டர் ராஸ் பிராண்ட்ஸ்டீன் தொடர்ந்து 740 மணி நேரம் இருந்து உலக சாதனையை ஏற்படுத்தியுள்ளார். இவர் இதற்கு முன் நான்கு முறை விண்வெளிக்குச் சென்றிருக்கிறார். இவர் 31 நாட்கள் விண்வெளியில் இருந்து விட்டு வந்தார். இவருக்கு முன் நார்ம்டகார்ட் ஸ்பேஸ் ஷட்டிலில் போய் 604 மணி நேரம் விண்வெளியில் இருந்து விட்டு வந்தவர். இவரும் நான்கு முறை விண்வெளிக்குச் சென்றிருக்கிறார்.

## நகரங்களின் உறவு!

உலகில் நகரங்கள் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டு வருகின்றன. அமெரிக்காவின் கொலராடோவிலுள்ள டென்வர் நகரம் ஒரு திட்டம் வகுத்து உலகத்து எட்டு நகரங்களுடன் உறவு கொண்டு உள்ளது. இவற்றில் எட்டாவது நகரம் நம் சென்னையான மதராஸ்-டென்வர் நகரில் மதராஸ் பூங்கா என்றொரு பகுதியை நிறுவி மதராஸைப் பற்றிய எல்லா விவரங்களையும் அதில் வைக்கப் போகிறார்கள்.





# மூட்டை தூக்கி

சிங்கபுரத்தில் சிங்கராயன் என்ற பணக்காரன் இருந்தான். அவனைப் பார்த்துப் போக அவனது இளம் பருவ நண்பன் குருமூர்த்தி வந்தான். இரு நண்பர்கள் சந்தித்துப் பல வருடங்களாகி விட்டன.

குருமூர்த்தி உடுத்தி இருந்த எளிய ஆடைகளைக் கொண்டு சிங்கராயன் அவனது பொருளாதார நிலை என்ன என்று ஊகித்துக் கொண்டான். அவன் ஏதோ பொருளுதவி கேட்க வந்திருப்பதாக எண்ணி அது பற்றிக் கேட்காமல் தனக்குள்ள மதிப்பையும் பணக்கார நண்பர்களைப் பற்றியும் சிங்கராயன் அடுக்கிக் கொண்டே போனான்.

குருமூர்த்தி தன் நண்பன் சொன்னதை எல்லாம் கேட்டுக் கொண்டே இருக்கும்போது ஒரு ஆள் வந்து ஒரு காகித உறையைக் கொடுத்துப் போனான். உறையைப் பிரித்து அதிலிருந்து கடிதத்தை எடுத்துப் படித்த சிங்கராயன் "பார்த்தாயா! இப்பகுதி ஜமீன்தாரர் இன்றிரவு விருந்திற்கு என்னை அழைத்திருக்கிறார்" என்றான்.

குருமூர்த்தியும் சிரித்தவாறே "நீ உன் பணக்கார நண்பர்களையும் உன்னிடமுள்ள பணத்தையும் பற்றிக் கூறியபோதே உன் அந்தஸ்து என்ன என்று புரிந்து கொண்டு விட்டேன். நான் இங்கு வந்ததே இந்த ஜமீன்தாரரிடம் ஒரு முக்கியமான வேலை பற்றிப் பேசத்தான். உன் உதவியால் அவரைக் கண்டு பேச முடியும் என்றே நினைக்கிறேன்" என்றான்.

சிங்கராயனும் "உனக்கு ஜமீன்தாரரிடம் முக்கியமான வேலையா! வேடிக்கையாக இருக்கிறது. அவ்வளவு பெரிய இடத்துத் தொடர்பா உனக்கு உள்ளது?" என்று கேட்

—சிவனார் செல்வன்—



டான். குருமூர்த்தியும் "எங்கள் ஊரில் ஜமீன்தாரருக்குச் சொந்த மான தரிசல் நிலப்பகுதி இருக் கிறது. அதைப் பண்படுத்தி சாகு படி செய்ய யாருக்காவது கொடுக் கலாம் என அவர் நினைக்கிறாராம். என்னைப் பற்றி நீ அவரிடம் ஒரு வார்த்தை சொன்னால் போதும்" என்றான்.

சிங்கராயனோ முகத்தை சுளித் துக் கொண்டு "நான் ஒரு விஷயம் சொல்கிறேன். தவறாக நினைக் காதே. இந்த ஜமீன்தாரர் அந்தஸ்து பார்ப்பவர். எனக்கு உன் மாதிரி சிநேகிதன் இருக்கிறான் என்பது தெரிந்தாலே என்னைக் கூடப் பார்க்க அவர் மறுத்து விடுவார்" என்றான். குருமூர்த்தியோ தான் சிரமதசையில் இருப்பதாயும் அந்த நிலம் கிடைத்தால் சுகமாக வாழ முடியும் என்பதை விவரித்துக் கூறினான்.

ஆனால் சிங்கராயனோ "விருந் திற்கு நேரமாகி விட்டது. நான் ஜமீன்தாரர் வீட்டிற்குப் போயாக வேண்டும். நீ நாளைக்கு வந்து என்னைப் பார். சாவகாசமாகப் பேசலாம்" என்று குருமூர்த்தியை அனுப்பி விட்டான்.

மறுநாள் காலை குருமூர்த்தி சிங்கராயனைப் பார்க்கச் சென்ற போது அவன் யாரோ ஒரு பணக் காரனுடன் பேசிக் கொண்டிருந் தான். குருமூர்த்தியிடம் "இவர் இவ்வூரிலேயே பெரிய பணக் காரர். தினமும் என்னைக் கண்டு பேசிவிட்டுப் போவார்" என்று கூறிவிட்டு அந்தப் பணக்காரனி டம் "இவன் என் நண்பன் குரு மூர்த்தி" என்றான்.

அந்தப் பணக்காரன் குருமூர்த் தியை ஒருமுறை ஏற இறங்க பார்த்துவிட்டு "என்ன இந்த மூட்டை தூக்கியா உங்கள் நண் பன்?" என்று கேலி செய்யும் குர லில் கேட்டான். சிங்கராயனோ "இவன் என் பள்ளித் தோழன் எப் போதாவது என்னைப் பார்க்க வரு வான். இவனுக்கு மூட்டைத் தூக் கிப் பிழைக்க வேண்டிய அவசி யம் இல்லையே" என்றான்.

ஆனால் அந்த பணக்காரனோ

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. நேற்று நான் கடையை மூடிவிட்டு என் நண்பர் அனுப்பிய இரு மாம் பழச் சாக்குகளை என் வீட்டிற்கு தூக்கி வர யாராவது கூலியாள் கிடைப்பானா என்று பார்த்துக் கொண்டிருந்தேன். அப்போது இவன் ஒரு மூட்டையைச் சுமந்து கொண்டு வந்து கொண்டிருந்தான். நான் அவனிடம் என் மூட்டைகளை எடுத்து வர முடியுமா என்று கேட் டேன். இவனோ என்னைப் பார்த்து சிரித்து விட்டு பதில் எதுவும் கூறா மல் போய் விட்டான். இவனது முகம் எனக்கு நன்றாக நினைவில் இருக்கிறது" என்று கூறிவிட்டு சிங்கராயனிடம் விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

அந்தப் பணக்காரன் போனதும் சிங்கராயன் குருமூர்த்தியை எரித்து விடுபவன் போலப் பார்த்து "இந்த மாதிரி மூட்டை தூக்க உனக்கு வெட்கமாக இல்லை? பணமுடை என்றால் என்னிடம் கேட்டால் ஐந்தோ பத்தோ கடன் கொடுத்தி ருப்பேனே. என் நண்பன் மூட்டை தூக்கிப் பிழைப்பபவன் என்று சொல்லிக் கொள்ளக்கூட வெட்க மாக இருக்கிறது. இனிமேல் என் வீட்டிற்கு வராதே. போய்விடு" என்றான்.

அதைக்கேட்ட குருமூர்த்தி "என்ன செய்வது? நேற்றிரவு ஒரு மூட்டை யைத் தூக்கிச் செல்ல வேண்டிய



கட்டாயம் ஏற்பட்டது. ஏனெனில் அந்த மூட்டைக்குள் இருந்தது நீ தான்" என்று சிரித்துக் கொண்டே கூறினான். அதைக்கேட்ட சிங்கரா யன் "நானா மூட்டைக்குள் இருந் தேன்? என்ன உளறுகிறாய்? உனக் குப் பைத்தியம் பிடித்து விட்டதா?" என்று கத்தினான்.

குருமூர்த்தியும் "நான் சொல்வ தைச் சற்று அமைதியாகக் கேள். நேற்றிரவு நான் என் ஊருக்குத் திரும்பும் போது ஜமீன்தாரரின் வீட்டின் முன் நீ நினைவிழந்து விழுந்து கிடந்ததைக் கண்டேன். விருந்தில் நீ நிறையக் குடித்து விட்டாய் என்று தெரிந்தது. உன்னை அந்த நிலையில் விட்டுப் போக உன் நண்பனான எனக்கு மன

மில்லை. மேலும் உன்னை அந்த நிலையில் வேறு யாராவது பார்த்தாலும் உனக்குப் பெருத்த அவமானம் ஏற்படும். அதனால் நீ யார் கண்ணிலும் படக் கூடாது என்பதற்காக உன்னைத் தூக்கி ஒரு சாக்குப் பைக்குள் போட்டுக் கட்டித் தூக்கிக்கொண்டு வந்து உன் வீட்டில் உன் மனைவியிடம் ஒப்படைத்தேன்'' என்றான்.

கோவிலுக்குப் போய்விட்டு அப்போதுதான் வந்த சிங்கராயனின் மனைவி குருமூர்த்தியைக் கண்டதும் வணங்கிவிட்டுத் தன் கணவரிடம் "நேற்று மட்டும் இந்த உங்களது நண்பர் உங்களைச் சாக்குப் பைக்குள் போட்டுத் தூக்கி வந்திராவிட்டால் இன்று உங்களை ஊரே ஜமீன்தாரரர் வீட்டு வாசலில் பார்த்துக் கை கொட்டிச் சிரித்திருக்கும். ஜமீன்தாரரும் "இந்த குடிகாரனா என் நண்பன்?'' எனக்கூறி இனியும் தன் வீட்டிற்கு நீங்கள் வரக்கூடாது என்று சொல்லி இருப்பார். இவற்றிலிருந்து உங்கள் நண்பரால் தப்பினீர்கள்'' என்றாள்.

இதைக்கேட்ட சிங்கராயன் வெட்கப்பட்டுத் தலை குனிந்து கொண்டான். பிறகு அவன் குருமூர்த்தியிடம் "என் அகம்பாவத்திற்குத் தக்க தண்டனை கிடைத்தது. என் மானத்தைக் காக்க நீ என்னை மட்டுமல்லாமல் என் மானத்தையும் மூட்டை கட்டி எடுத்து வந்து என் வீட்டில் சேர்த்திருக்கிறாய். உன்னை எப்படி எல்லாமோ பேசிவிட்டேன். என்னை மன்னித்து விடு. என் கர்வம் ஒழிந்தது. நீதான் என் உண்மையான நண்பன்'' என்றான்.

பிறகு அவன் அப்போதே குருமூர்த்தியை ஜமீன்தாரரிடம் அழைத்துச் சென்று அவன் வந்த காரணத்தைக் கூறினான். ஜமீன்தாரும் அந்தத் தரிசு நிலங்களை குருமூர்த்திக்கே அளித்தார்.





# ஊரும் மதித்தது!

வேம்பூரில் சாம்புசிவம் என்ற மகாவித்வான் இருந்தார். ஆனால் அந்த ஊரில் விவசாயிகளும் வேறு பல அன்றாடக் கூலி வேலை செய்பவர்களுமே இருந்ததால் அவருக்கு மதிப்பு கிடைக்கவில்லை. அதனால் மகாவித்வான் தன் வாழ்க்கையை நடத்தச் சிரமப்படலானார். அப்போது அவர் மனதில் தலைநகருக்குப் போய் மன்னனிடம் உதவி கேட்டுப் பார்க்கலாம் என்று தோன்றியது.

சாம்பசிவம் தலைநகரை அடைந்து மன்னனை பேட்டி காணப் பல நாட்கள் முயன்றார். ஆனால் முயற்சியில் வெற்றி பெறவில்லை. ஒரு நாள் அவர் தம் பள்ளி நண்பனான பரமனைச் சந்தித்தார். அவன் மன்னனின் தர்பாரில் வேலை செய்கிறான் என்பது தெரிந்தது. சாம்பசிவம் தான் மன்னனை பேட்டி காண வந்த காரணத்தைக் கூறவே பரமுனும் "நான் உன்னை மன்னரிடம் அழைத்துச் செல்கிறேன். அதன்பிறகு அவரது உதவி பெறுவது உன் சாமர்த்தியத்தில் இருக்கிறது" என்றான்.

பரமன் சொன்னபடி மறுநாள் சாம்பசிவத்தை அழைத்துக்கொண்டு போய் மன்னனின் முன் நிறுத்தி "அரசே! இவர் என் ஆருயிர் நண்பர். மகாவித்வான் பெயர் சாம்பசிவம்" எனக் கூறினான். மன்னனும் சாம்பசிவத்தோடு பேசி அவரது புலமையைக் கண்டு மகிழ்ந்து "நீங்கள் என் ஆஸ்தான வித்வானாக இங்கே இருக்கிறீர்களா?" என்று கேட்டான்.

சாம்பசிவமும் "அரசே! நான் என் ஊரில் இருந்து கொண்டே இலக்கியப் பணிபுரிய விரும்புகிறேன். நான் சற்று வசதியாக வாழ பொருளு

—வெ. லாவண்யா—



தவி செய்ய வேண்டுகிறேன்'' என்று கேட்டுக் கொண்டார்.

மன்னனும் "உங்களைப் போன்ற மகாவித்வான்களை நான் வறுமையில் வாட விடமாட்டேன். உங்களுக்கு ஐம்பதாயிரம் வராகன்கள் கொடுக்கிறேன். அதைக் கொண்டு வீடு நிலம் என்று வாங்கிக் கொண்டு சுகமாக வாழ்ந்து இலக்கியப் பணிய்யைத் தொடருங்கள். இன்னொரு விஷயம். என்னிடம் ஒரு பழைய ஏட்டுசுவடி உள்ளது. அதில் என்ன எழுதி இருக்கிறது என்பதை இது வரை எந்தப் பண்டிதராலும் சொல்ல முடியவில்லை. இதை எடுத்துப் போய் ஒரு வருடத்துள் இதன் பொருளைக் கூறினால் தங்களுக்கு மேலும் ஐம்பதாயிரம் வராகன்கள் கொடுக்கிறேன்'' என்றான்.

சாம்பசிவமும் அதைச் செய்வதாகக் கூறி மன்னன் கொடுத்த ஐம்பதாயிரம் வராகன்களையும் ஓலைச் சுவடியையும் எடுத்துக் கொண்டு தன் ஊருக்குச் சென்றார். போகு முன் அவர் தம் நண்பன் பரமனுக்கும் நன்றி தெரிவித்தார்.

அதற்குப் பின் மன்னன் பரமனிடம் சாம்பசிவனைப் பற்றித் தினமும் புகழ்ந்து ஏதாவது சொல்லிக் கொண்டே இருந்தான். இதனால் பரமனுக்கு சாம்பசிவத்தின் மீது பொறாமை ஏற்பட்டது. மன்னன் சாம்பசிவனைப் புகழப் புகழ அது அதிகரித்துக் கொண்டே போயிற்று. அதனால் மன்னன் மனதில் சாம்பசிவத்தைப் பற்றி கெட்ட அபிப்பிராயம் ஏற்படும்படி செய்ய தக்க தருணத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

பத்து வருடமாக மன்னனிடம் தான் வேலை பார்த்தும் தனக்கு மதிப்பு இல்லை. ஆனால் தான் அழைத்து வந்து சாம்பசிவத்திடம் மன்னன் ஒருநாள் பேசி ஐம்பதாயிரம் வரான்கள் கொடுத்து உயர் மதிப்பும் கொண்டிருக்கிறானே என எண்ணிப் பரமன் மனம் வெதும்பினான்.

ஒருநாள் அவன் மன்னனிடம் "அரசே! இந்த சாம்பசிவம் மகா வித்வானாக இருந்த போதிலும் கர்வம் பிடித்தவன். நான் கூட பல

முறை தங்களைக் கண்டு உதவி பெறும்படி இதற்கு முன் பல தடவைகள் சொல்லியும் கேட்க வில்லை. வயிறு வாடியதும் வந்து விட்டான்'' என்றான்.

மன்னனும் "நிறையப் படித்த வர் தாம் கற்றது பற்றி பெருமிதம் கொள்வது இயல்பே'' எனக்கூறி அதற்காக சாம்பசிவனை மேலும் புகழ்ந்தான். பிறகு அவன் "பரமா! நீ உன் ஊருக்குப் போய் மகாவித் வான் நான் கொடுத்த ஓலைச் சுவடியில் எவ்வளவு படித்திருக் கிறார் என்று தெரிந்து கொண்டு வா'' என்றான்.

பரமனும் தன் ஊருக்குப் போகா மல் வீட்டிலேயே இரண்டு நாட் கள் இருந்து விட்டு மூன்றாவது நாள் தர்பாருக்குப் போய் மன்னனிடம் "அவன் இன்னமும் அதைப் பார்க்க வில்லையாம்'' என்றான். மன்ன னும் "சரிதான். நான்தான் ஒரு வருட அவகாசம் கொடுத்திருக்கிறேனே. சாவகாசமாகப் பார்க்கட்டும்'' என் றான். மன்னன் கோபித்துக் கொள் வான் என எதிர்பார்த்த பரமன் மன் னன் கூறியதைக் கேட்டுத் திகைத் துப் போனான்.

அப்போது மன்னன் "சரி. நாளை நான் போய் மகாவித்வானைப் பார்த்தால் உற்சாகத்தோடு ஓலைச் சுவடியைப் பரிசீலிக்கத் தொடங்கு வார். எனவே நீயும் நாளை என் னோடு வா'' என்றான்.

பரமனுக்கு உதறல் கண்டது. தன் குட்டு வெளியாகி அதனால் மன்னன் தன்னை வேலையிலிருந்து நீக்கி விடுவானோ என்ற பயம் ஏற்



பட்டது. அவன் மன்னன் போய் சாம்பசிவத்தைப் பார்ப்பதற்கு முன் தான் பார்த்து அவனைச் சரிகட்ட நினைத்தான். அவன் மன்னனிடம் "நான் முன்னதாகப் போய்த் தாங்கள் வருகையை அவனுக்குத் தெரிவிக்கிறேன்" எனவே மன்னனும் அவனை அனுப்பி விட்டுப் பிறகு தானும் கிளம்பி வேம்பூருக்குச் சென்றான்.

முதலில் சென்ற பரமன் சாம்பசிவத்தைக் கண்டு தான் மன்னனிடம் கூறிய பொய்யைச் சொல்லித் தன்னை மன்னனிடம் காட்டிக் கொடுத்து விடவேண்டாம் என்று வேண்டினான். சாம்பசிவமும் "கவலைப்படாதே. உனக்கு எந்தத் தொல்லையும் நேராதீ படி நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார். மன்னன் அவ்வூருக்கு வந்து தன்னைக் காணப் போகிறான் என்பதைக் கேட்டு மிகவும் மகிழ்ச்சி அடைந்தார்.

இதற்குள் மன்னன் அவ்வூருக்கு வந்து சாம்பசிவத்தைப் பார்க்கப் போகிறார் என்ற செய்தி எங்கும் பரவி விட்டது. அப்போதுதான் வேம்பூர் வாசிகள் "அடேயப்பா! நம் ஊர் சாம்பசிவம் மன்னன் மதிக்கும் அளவிற்கு அவ்வளவு பெரிய மனிதரா? அவரது பெருமை தெரியாமல் இவ்வளவு நாட்களாக இருந்து விட்டோமே. அவரால் மன்னன் நம் ஊருக்கு வருவது அவருக்கும் பெருமை நமக்கும் பெருமை" என்று பேசிக் கொண்டார்கள்.

மன்னன் வேம்பூருக்கு வந்தான். சாம்பசிவத்தையும் பரமனையும் பார்த்தான். பிறகு அவன் பரமனிடம் "இப்போதாவது சாம்பசிவத்தைப் புரிந்து கொண்டாயா? அவர் கர்வம் கொண்டவர் அல்ல. தம் பணியில் அமைதியாக ஈடுபட்டிருப்பவர். அதனால்தான் அவரை ஒருநாள் கண்டாலும் என்னைப் போன்றவர்கள் மதித்துக் காண வருகிறார்கள்" என்றான்.

பரமன் வெட்கத்தால் தலை குனிந்து கொண்டான்.






மஹோதரன் கூறியதைக் கேட்ட பின் கும்பகர்ணன் எழுந்து ராட்சஸர்கள் புடைசூழ இராவணனைக் காணச் சென்றான். கும்பகர்ணனின் வருகையைத் தெரிவிக்க முன்கூட்டியே சில ராட்சஸர்கள் இராவணனிடம் ஓடினார்கள்.

மலை போலச் சென்ற கும்பகர்ணனைப் பார்த்த ராட்சஸர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். வானரர்களோ மலைத்துப் போய் "ஐயோ! கும்பகர்ணனாம்" என்று கூவினார்கள். சிலர் பயந்தும் ஓடினார்கள்.

அவர்கள் கூறியதையும் பயந்து ஓடுவதையும் கண்ட இராமர் விபீஷணனிடம் "யார் இந்தக் கும்பகர்ணன்?" என்று கேட்டார். விபீஷணனும் கும்பகர்ணனைப் பற்றி அவருக்கு விவரமாகக் கூறலானான்.

"கும்பகர்ணன் எனக்கு அண்ணன். இராவணனுக்குத் தம்பி. இவன் விஸ்ரவசுவின் மகன். போரில் இந்திரனையும் எமனையும் கூடவெல்லும் பலம் பெற்றவன். இவனைப் போல பெரிய உருவம் கொண்ட ராட்சஸர்கள் யாருமே இல்லை. இவன் மற்றவர்களைப் போல வரங்கள் பெற்று பலசாலியாகிவிடவில்லை. பிறக்கும்போதே வலுவுடன் வந்தவன். அப்போதே அவன் மிகவும் பசியுடன் இருந்ததால் பல பிராணிகளைப் பிடித்து விழுங்கிவிட்டான். இதைக் கண்டு எல்லோரும் பயந்து போனார்கள். இந்திரனிடம் போய் அவர்கள் முறை



யிட்டார்கள். இந்திரன் கோபம் கொண்டு தன் வஜ்ஜிராயுதத்தால் கும்பகர்ணனை அடித்தான். கும்பகர்ணனோ அதை இலட்சியம் செய்யாமல் சிங்கம் போல கர்ஜித்தான். அந்த ஒலி எங்கும் எதிரொலித்து எல்லோரையும் நடுநடுங்க வைத்தது. கும்பகர்ணன் இந்திரனின் வாகனமான ஐராவத யானையின் ஒரு தந்தத்தை ஒடித்து அதால் இந்திரனைக் குத்தினான். இந்திரன் பயந்து போய் தேவர்களை அழைத்துக் கொண்டு பிரம்மதேவனிடம் ஓடினான். அவனிடமிருந்து விவரங்களைக் கேட்ட பிரம்மா ராட்சஸர்களை எல்லாம் ஒன்று கூட்டினார். அவர்களில் கும்பகர்ணனும் இருப்பது கண்டு பிரம்மாவே பயந்து போனார். அவர் அவனைப் பார்த்து ''உலகத்தை அழிக்கவா உன்னை விஸ்ரவசு மகனாகப் பெற்றார்? நீ இனியும் எதுவும் செய்யாதிருக்க எப்போதும் மெய்மறந்து தூங்கிக் கொண்டே இரு'' என்று சாபம் கொடுத்தார். மறுநிமிடமே கும்பகர்ணன் பிரம்மாவின் முன் விழுந்து குறட்டை விட்டுத் தூங்கலானான். அதைக் கண்ட இராவணன் பிரம்மாவிடம் ''நீங்கள் கும்பகர்ணனை இப்படிக் கடுமையாக சபித்திருக்கக் கூடாது. எனவே உங்கள் சாபத்தை தளர்த்திச் சற்று எளிதாக்குங்கள்'' என்றான். அப்போது பிரம்மா ''சரி இவன் ஆறு மாதம் தூங்கி ஆறுமாதம் விழித்திருக்கட்டும்'' என்றார். கும்பகர்ணன் அது முதல் ஒரு வருடத்தில் ஆறு மாதம் தூங்கிவிட்டு எழும் போது மிகவும் பசித்து இருப்பதால் ஏராளமாக உணவை விழுங்கலானான். இந்த விதமாக இப்போது கும்பகர்ணன் தூக்கம் கலைந்து எழுந்து எதிரில் தென்பட்டதை எல்லாம் விழுங்கினான். அவன் இனிப் போர்க்களத்திற்கு வந்து வானரர்களை விழுங்க முயல்வான்.

இதைக் கேட்ட இராமர் நீலனிடம் கும்பகர்ணனை எதிர்க்கத் தயாராகும்படிக் கூறினார்.

கும்பகர்ணன் இராவணனைக் கண்ட போது அவன் கவலையுடன் இருந்ததைப் :ார்த்தான். இராவ



ணன் கும்பகர்ணனைக் கண்டதும் மகிழ்ந்து போய் கட்டித்தழுவிக் கொண்டான். அப்போது கும்பகர்ணன் "ஏன் கவலையாக இருக்கிறீர்கள்? என்ன ஆபத்து அப்படி வந்துவிட்டது?" என்று கேட்டான்.

இராவணனும் "இப்போது எனக்கு ஆபத்து இராமன் என்ற உருவில் வந்திருக்கிறது. அவன் சுக்கிரீவனோடும் வானரப்படையோடும் வந்து போர் தொடுத்திருக்கிறான். நம் பல வீரர்கள் போர்க்களத்தில் மாண்டு போனார்கள். எதிரிக்கோ பெரிய நஷ்டம் எதுவும் இல்லை. எனவே நீ போர்க்களத்திற்குச் சென்று எதிரிகளைக் கொன்று இலங்கையைக் காப்பாற்று" என்றான்.

கும்பகர்ணனும் "இப்படி நடக்கும் என்று முன்பே நாம் தர்பாரில் பேசியதுதானே. சீதையைக் கவர்ந்து வந்த பாவத்தின் பலன் கைமேல் கிடைத்து விட்டது. இது பற்றி நம் தம்பி விபீஷணன் கூறியது நமக்கு நன்மை பயக்கக் கூடியதாக இருந்தது. ஆனால் நீங்கள் தாம் கேட்கவில்லை" என்றான்.

அது கேட்டு இராவணன் கோபம் கொண்டு "தம்பீ! நீ எனக்கு அறிவுரை கூற வேண்டும் என்பதற்காக உன்னை அழைத்து வரச் சொல்லவில்லை. இப்போது நமக்கு வேண்டியது வெற்றி. அறிவுரை அல்ல. தெரிந்ததா?" என்று கடுங்குரலில் கேட்டான்.

அதைக் கேட்ட கும்பகர்ணன் "அண்ணா! நீங்கள் இலங்கையின் அதிபர். நான் உங்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிய வேண்டியவன். ஆனால் உங்கள் உறவினன் என்ற முறையில் உங்களுக்கு நல்லது சொல்ல முயன்றேன். அதை ஏற்பதும் ஏற்காததும் உங்கள் இஷ்டம். எதிரிகளைப் பற்றி நீங்கள் பயப்படாமல் கவலையற்று இருங்கள். அந்த இராமனையும் இலட்சுமணனையும் கொன்று வானரப்படையை அழித்து ராட்சஸர்கள் மகிழும்படிச் செய்கிறேன். நான் உயிரோடு உள்ளவரை அந்த இராமனால் உங்களை ஒன்றும் செய்ய முடியாது" என்றான்.



அதைக் கேட்ட மஹோதரன் "இராவணன் சீதையைக் கவர்ந்து வரப்போவதாகக் கூறிய போது நாங்கள் எல்லாம் அவனை ஆதரித்தோம். இப்போது நீ உன் சூரத்தனத்தைச் செயலில் காட்ட வேண்டும். வெறும் வாய் வார்த்தைகளால் அல்ல. உன்னால் மட்டும் இராமனைக் கொன்று விட முடியுமா? அவனது பலம் எவ்வளவு என்று சிந்தித்துப் பார்த்தாயா?" என்று கேட்டான்.

கும்பகர்ணன் மகோதரனை எரித்து விடுபவன் போல் பார்க்கவே அவன் அதனை இலட்சியம் செய்யாமல் இராவணனிடம் "நாம் இராமனைக் கொன்று விட்டதாகக் கூறி விழா நடத்துவோம் அதில் சீதை ஏமாந்து பணிந்து விடுவாள்" என்றான்.

கும்பகர்ணனோ எரிச்சலுடன் "இந்த மாதிரி குருட்டுத்தனமான யோசனைகள் தான் உன் போன்ற கோழைகளுக்குத் தோன்றும். உன் போன்றவர்கள் என் அண்ணனைச் சுற்றி இருப்பதால்தான் அவர் இன்று இந்த நிலைக்கு வந்திருக்கிறார். போரைக் கண்டு காததூரம் ஓடும் நீயா எனக்கு போர் பற்றிக் கூறுகிறாய்? உன்னைப் போன்றவர்களால் தான் இலங்கை நாசமாகிக் கொண்டிருக்கிறது. நீங்கள் தாம் ராட்சஸர்களின் அழிவிற்கு வழி தேடிக் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள். உங்களை எல்லாம் காப்பாற்ற நான் இப்போதே போர்க்களத்திற்குப் போகிறேன்" என்றான்.

அப்போது இராவணன் கடகட வென்று சிரித்து "இந்த மகோதரன் இராமனின் பெயரைக் கேட்டாலே நடுநடுங்குகிறான். போர் என்றாலே ஓடி மறைகிறான். அதனால்தான் இப்படிக் குறுக்கு வழிகளைப் பற்றி யோசிக்கிறான். தம்பீ! எனக்கு உன்னை விட்டால் வேறு யார் இருக்கிறார்கள்? நீ இப்போதே போர்க்களத்திற்குப் புறப்படு. உன் பலம் எவ்வளவு என்று நான் அறிவேன். வானரர்களைப் பிடித்து விழுங்கு. உன்னைப் பார்த்தாலே வானரர்கள் பயந்து ஓடுவார்கள். விடாதே அவர்களை, எதிரிகளை



எல்லாம் ஒழித்து விட்டு வெற்றியுடன் திரும்பி வா! இனி இராமனும் இலட்சுமணனும் எங்கே உயிருடன் இருக்கப் போகிறார்கள்!" என்று உற்சாகத்துடன் கூறினான்.

கும்பகர்ணன் போருக்குக் கிளம்பினான். அவன் கையில் பளபள வென மின்னும் கூரிய சூலம் இருந்தது. அதை ஆட்டியவாறே இராவணனிடம் "நான் எந்தப் படையோடும் போகப் போவதில்லை. தனியாகவே போர்க்களத்திற்குச் செல்கிறேன். என்னைப் பார்த்து பயந்து ஓடும் வானரர்களை ஒருவர் விடாமல் பிடித்து விழுங்கி விடுகிறேன்" என்றான்.

இராவணனும் "நீ சொல்வது இருக்கட்டும். எதற்கும் நீ படைகளோடு போவது நல்லது. வானரர்கள் பலசாலிகள். சுறுசுறுப்புடன் இயங்குபவர்கள். எதிலும் பிடிவாதமாக இருப்பவர்கள். சற்று அசட்டையாக இருந்தால் போதும், கொன்று குழிதோண்டிப் புதைத்து விடுவார்கள்" என்றான்.

பிறகு இராவணன் கும்பகர்ணனின் நெற்றியில் வீரத்திலகம் இட்டான். கும்பகர்ணன் கவசம் தரித்து இராவணனை வணங்கி அவனது ஆசிகளைப் பெற்றான். பின்னர் அவன் பெரிய படையோடு போர்க்களத்திற்கு ஆர்ப்பாட்டத்துடன் சென்றான்.

கும்பகர்ணன் தன் வீரர்களிடம் "இந்த வானரர்களால் நம்மை ஒன்றும் செய்து விட முடியாது. காட்டில் திரியும் இவற்றிற்குப் போர் முறைகள் என்ன என்றே தெரியாது. இவர்களைத் தூண்டி இங்கே அழைத்து வந்தவர்கள் இராமரும் இலட்சுமணனுமே. முதலில் அவர்களைக் கொன்று விடுகிறேன்" என்றான்.

கும்பகர்ணனைப் பார்த்ததுமே வானரர்கள் பயந்து ஓடலாயினர். அதைக் கண்ட கும்பகர்ணனின் உற்சாகம் கரை புரண்டது. அப்போது அங்கதன் வானர வீரர்களைப் பார்த்து ஏன் இப்படி பயந்து ஓடுகிறீர்கள்? உங்களுக்கு பலம் இல்லையா? துணிச்சல் இல்லையா? இவை எல்லாம் உங்களை விட்டா

போய் விட்டது? போகாதீர்கள். போர்க்களத்தில் நின்று எதிர்த்துப் போராடுங்கள். வருபவன் கும்ப கர்ணன். ராட்சஸர்கள் மாயாவி கள். நம்மை பயமுறுத்தவே இப் படி பயங்கர உருவு எடுத்து வந் திருக்கிறான். இவனும் எல்லா ராட்சஸர்களைப் போலத்தான். சாதாரணமானவன், இவனிடம் விசேஷ சக்தி எதுவும் இல்லை'' என்று கூறி வானரர்களின் பயத் தைப் போக்கினான்.

அதைக் கேட்டு வானரர்களுக்கு தைரியம் வந்தது. உற்சாகம் கரை புரண்டது. கற்களையும் மரங்களை யும் எடுத்துக் கொண்டு ராட்சஸப் படைகளைத் தாக்கலானார்கள். கும்பகர்ணனைச் சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். ஆனால் கும்பகர் ணனோ சற்றும் தளர்ந்து விட வில்லை. அவன் வானரர்களைக் கடுமையாகத் தாக்கிக் கொல்ல லானான்.

வானரர்கள் மளமளவென்று விழுந்தது கண்டு எஞ்சிய வானரர் கள் பயந்து ஓடலானார்கள். அங்க தன் அவர்களை எல்லாம் தடுத்து நிறுத்தி "இதென்ன பைத்தியக்காரத் தனம்! யாரோ ஒரு ராட்சஸன் மலை போல இருக்கிறான் என்ற காரணத்திற்காக பயந்தா ஓடுவது? எதிர்த்துத் தாக்குங்கள். வெற்றி நமதே'' என்று கூறி உற்சாக மூட்டினான்.



அதுகேட்டு வானரர்கள் மீண்டும் துணிச்சல் பெற்றவர்களாய் கும்ப கர்ணனை எதிர்த்துப் போராடலா னார்கள். அனுமார் அவர்களை எல் லாம் துணிவுடன் போர்புரியச் சொன்னார். அவர் தலைமையில் ரிஷபன், சரபன், மைந்தன், முதலா னோர் திரண்டு கும்பகர்ணனை எதிர்க்கத் தயாரானார்கள்.

கும்பகர்ணனோ வானரர்களை அடித்து நொறுக்கி விழுங்கிக் கொண்டிருந்தான். துவிதீயன் ஒரு பெரிய பாறையைப் பெயர்த்து எடுத்து கும்பகர்ணன் மீது விட் டெறிந்தான். ஆனால் அது கும்ப கர்ணனைத் தாக்காமல் அவனது படை வீரர்கள் மீது விழுந்தது. அத னால் பலராட்சஸர்கள் மடிந்தார்

கள். தேர்கள், குதிரைகள் எனப் பலவும் நாசமாகின.

துவிதீயன் தான் எறிந்த பாறை கும்பகர்ணனைத் தாக்காது போனது கண்டு இன்னொரு பாறையைப் பெயர்த்து வீசினான். அதுவும் கும்பகர்ணன் மீது படாமல் ராட்சஸ வீரர்கள் மீது விழுந்து அவர்களை அழித்தது. இது கண்டு ராட்சஸர்கள் ஆத்திரம் கொண்டு வானரவீரர்களைக் கடுமையாகத் தாக்கினார்கள். இரு தரப்பிலும் பலத்த சேதம் ஏற்பட்டது.

இதைக் கண்ட அனுமார் ஆகாயத்தில் இருந்தபடியே கும்பகர்ணனைக் கற்களைக் கொண்டு மரங்களைப் பெயர்த்து எடுத்து அவன் மீது வீசியும் தாக்குதல் நடத்தினார். கும்பகர்ணன் அவற்றை எல்லாம் தன் சூலத்தால் தடுத்துப் பொடிப் பொடியாகப் போகும்படிச் செய்தான். அது கண்டு அனுமார் கோபம் கொண்டு ஒரு பெரிய பாறையைப் பெயர்த்து எடுத்துக் கும்பகர்ணன் மீது எறிந்தார்.

இதனால் கும்பகர்ணனின் உடலில் பெருத்த காயம் ஏற்பட்டது. ரத்தம் வழியலாயிற்று. அதனால் ஆத்திரம் கொண்டு தன் சூலத்தால் அவன் அனுமாரின் மார்பில் குத்தினான். அனுமார் கத்தியவாறே தம் நினைவை இழந்து கீழே விழுந்தார்.

அது கண்டு நீலன் கும்பகர்ணனைத் தாக்கலானான். அவனும் ஒரு பெரிய பாறையை எடுத்துக் கும்பகர்ணனின் மீது எறிந்தான். கும்பகர்ணன் தன் சூலத்தால் அதைப் பொடிப் பொடியாகப் போகச் செய்தான். இதன்பிறகு வானரப் பிரமுகர்கள் வரிசையாக வந்து கும்பகர்ணனைத் தாக்கியும் எவ்விதப் பலனும் இல்லாது போயிற்று. வந்த வானர வீரர்கள் யாவரும் கும்பகர்ணனின் தாக்குதலைத் தாங்க முடியாமல் தம் நினைவை இழந்து விழுந்தார்கள்.





# தண்டனையா?

மாதவசேனன் என்ற மன்னனிடம் நாகலிங்கம் என்ற விகடகவி இருந்தான். அவன் தன் பேச்சால் எல்லோரையும் மயக்கித் தான் சொல்வதை எல்லோரும் ஏற்கும்படியும் செய்து விடுவான். ஒருநாள் மாதவசேனன் விகடகவியிடம் "எனக்கு தீங்கு வராமலும் உனக்கு நன்மை பயக்கக் கூடியதுமாய் ஏதாவது ஒன்றைக் கேள். கொடுக்கிறேன்" என்றான்.

விகடகவியும் "மிக்க நன்றி அரசே! ஆனால் இப்போது கேட்கவில்லை. தக்க சமயத்தில் இதைக் கேட்டு வாங்கிக் கொள்கிறேன்" என்றான். மன்னனும் "உன் இஷ்டப்படியே நடக்கும்" என்றான்.

மாதவசேனனின் ஒரே மகன் சூரசேனன். அவனுக்கு அளவுக்கு மீறிய செல்லம் கொடுத்து வளர்த்து விட்டதால் அவன் கெட்டவழிகளில் போகவே மன்னன் அவன் கல்வி பயிலக் குருகுலத்திற்கு அனுப்பினான். அங்கும் சூரசேனன் சரியாக நடக்காததால் குரு அவனுக்கு தண்டனை அளிப்பது போல சில தினங்களுக்கு அரண்மனையில் போய் இருந்து வருமாறு அனுப்பி வந்தார்.

ஒரு நாள் மாதவசேனன் விகடகவியிடம் தன் மகனைப் பற்றிக் கவலைப்படுவதாகக் கூறி " என் மகன் குருகுலத்தில் சரியாக நடந்து கொள்ளாததால் குரு அவனுக்கு தண்டனை அளிப்பது போல இங்கு அனுப்பி விடுகிறார். ஆனால் எல்லோருக்கும் இது தண்டனை என்பது தெரியவில்லை" என்றான்

அப்போது விகடகவி "ஓ இதுவா விஷயம்?. மணலைப் பிழிந்து எண்ணெய் எடுக்கலாம், பாலைவனத்தில் தோண்டி ஊற்றைக்

—சுதா கிருஷ்ணசாமி—



கூட வரவழைத்து விடலாம். முயல் கொம்பைக் கூட தேடிக் கண்டு பிடித்துக் கொண்டு வந்து விடலாம். ஆனால் முட்டாளுக்கு மட்டும் ஹிதோபதேசம் செய்ய முடியாது என்று ஒரு சமஸ்கிருத ஸ்லோகம் இருப்பது என் நினைவிற்கு வரு கிறது'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் "அப் படியானால் குருவின் உபதேசங் களால் கூட என் மகன் திருந்த வில்லை. அவன் ஒரு முட்டாள் என்று கூறுகிறாயா?" என்று கோபத் தோடு கேட்டான். விகடகவியும் "அரசே! நான் இப்படிக் கூறியது தவறுதான். என்னை மன்னித்து விடுங்கள்" என்று வேண்டினான். ஆனால் மன்னன் மேலும் கோபம் கொண்டு இரைந்தான்.

அப்போது விகடகவி முன்பு ஒரு முறை மன்னன் தனக்குக் கொடுத்த வாக்குறுதியை ஞாபகப்படுத்தி "நான் தங்களுக்குக் கெடுதல் விளை விக்காமல் எனக்கு நன்மை பயப் பதைத் தங்களிடம் இப்போது கேட் கிறேன். நான் இவ்வூர் கோவில் வாசலில் அமர்ந்து அங்கு வருவோ ரின் செருப்புகளைச் சுத்தமாகத் துடைக்கும்படி எனக்கு தண்டனை கொடுங்கள். ஆனால் இந்த தண் டனை நீங்கள் எனக்குக் கொடுத்த தாக யாருக்கும் தெரியக்கூடாது?" என்றான்.

மன்னனும் விகடகவியைச் சிறை சாலையில் தள்ளுவதை விட இப் படிக் கீழ்த்தரமான வேலையைச் செய்யச் சொல்வது அவனுக்கு தண்டனை கொடுப்பது போலத் தான் என்று நினைத்து அதற்கு அனு மதி அளித்தான். மறுநாளே விகட கவி கோவில் வாசலில் அமர்ந்து அங்கு வருவோரிடம் அவர்களது செருப்புகளைக் கேட்டு வாங்கிச் சுத்தமாகத் துடைக்கலானான்.

மக்களும் முதல் இரண்டு நாட் களுக்கு அவனது இந்தச் செயலைப் பைத்தியக்காரச் செயல் என்று கேலி செய்தார்கள். அவன் அதை ஒரு விரதமாகச் செய்வதாக கூறி ஆரம்பித்ததால் மூன்றாவது நாள் முதல் மக்கள் அவனிடம் ஏதோ சக்தி இருப்பதாக எண்ணி மரியாதை

செலுத்தலானார்கள். பலர் வணங்கினார்கள். சிலர் காணிக்கைகள் கூடச் செலுத்தினார்கள். விகடகவியின் பெயர் 'செருப்பு சாமியார்' என்றாகி விட்டது.

அந்த சாமியார் செருப்பை துடைத்துக் கொடுத்தால் தாம் நினைப்பது கை கூடுகிறது என மக்களிடையே ஒரு நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. செருப்பு சாமியாரைப் பற்றி மன்னன் கேள்விப்பட்டு தன் குடும்பத்தோடு அவரை தரிசிக்க வந்தான். ஆனால் அந்த சாமியார் தன் விகடகவிதான் எனக் கண்டு மலைத்து நின்றான்.

விகடகவி மன்னனின் செருப்புகளையும் துடைத்து விட்டு அங்கு கூடி இருந்த மக்களிடம் "பொது ஜனங்களே! இன்றோடு என் விரதம் முடிந்தது. என்போல ஐம்புலன்களை அடக்கி அகங்காரம் ஒழிய இந்த விரதத்தை யாராவது மேற்கொள்வதானால் அவர் தாராளமாக இந்த இடத்தில் அமரலாம்" என்று கூறி எழுந்தான்.

அப்போது அந்த இடத்தில் உட்காரப் பலர் போட்டி போட்டுக் கொண்டு முன் வந்தார்கள். விகடகவி அவர்களில் ஒருவனைத் தேர்ந்தெடுத்து அங்கு உட்கார சொல்லி "உன் விரதம் முடிந்ததும் நீ வேறு ஒருவனைத் தேர்ந்தெடுத்து இந்த இடத்தில் உட்கார வைத்துவிட்டுப் போ" எனக் கூறிவிட்டு அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தான்.

மன்னன் அவனிடம் "செருப்புத் துடைப்பதை நான் உனக்கு



தண்டனையாக எண்ணித்தானே கொடுத்தேன். அதெப்படி நீ இதைப் புனிதமாக்கி சக்தியுள்ள சாமியார் என்று புகழ் பெற்றாய்?" என்று கேட்டான்.

விகடகவியும் புன்னகை புரிந்த வாறே "அரசே! ஒருவன் தலை கீழாகத் தொடங்கி ஜபம் செய்தால் அது தவம் என்றாகிறது. ஆனால் ஒரு திருடன் அவ்வாறு தொங்கி னால் அது அவனுக்கு தண்டனை என்றாகிறது. இந்த உலகில் எந்த் ஒரு வேலையும் இடம், நேரம் இவற்றைக் கொண்டு நல்லது அல் லது கெட்டது எனப் பெயர் பெறு கிறது. தண்டனை என நீங்கள் கூறா மல் என்னை அந்த வேலையைச் செய்யச் சொன்னது மரியாதைக்கு உகந்த விரதமாக மாறியது. நீங்கள் என்னை தண்டிப்பதாக நினைத்தீர் கள். ஆனால் மக்களோ என்னை வணங்கி மரியாதை செலுத்தினார் கள்" என்றான்.

மன்னனும் "நீ இப்படிச் செய்ய ஏதோ உள்நோக்கம் இருக்க வேண் டும். நீ இதனால் எனக்கு என்ன உணர்த்த முயன்றாய்?" என்று கேட்டான்.

விகடகவியும் "தங்கள் மகனுக்கு குரு பலர் அறிய தண்டனை கொடுத் திருந்தால் அது தங்களுக்கு அவ மானம். இளவரசரும் வெளியே தலைகாட்ட வெட்கப்படுவாரே. அதனால் தான் குரு இளவரசருக்கு இப்படி யாரும் புரிந்து கொள்ள முடியாத தண்டனையாகக் கொடுத்து அவ்வப்போது அரண்மனைக்கு அனுப்பி நல்ல பழக்கங்கள் வரும் படிச் செய்கிறார்" என்றான்.

மன்னனும் "ஓ! இனிமேல் என் மகனை குருகுலத்திலேயே மாணவர் களிடையே இருக்க வைத்து நற் பழக்கங்களைக் கற்கச் சொல் கிறேன். நீ செருப்பு சாமியாராகி எனக்குச் சரியான பாடம் கற்பித் தாய்" எனக்கூறி விகடகவிக்கு ஏராளமான பரிசுகளைக் கொடுத்து அனுப்பினான்.





# கைநாட்டுப் பிரபு!

வெகு காலத்திற்கு முன் ஸ்பெயின் நாட்டின் ஒரு பிரபு இருந்தான். அவன் பணத்திமிர் பிடித்தவன். அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது. ஆனாலும் தனக்கே எல்லாம் தெரியும் என்ற அகம்பாவத்தோடு இருந்தான். பணத்தை விட்டெறிந்தால் படித்தவர்கள் எல்லாம் தன் காலடியில் வந்து விழுவார்கள் என்று கர்வப்பட்டுக் கொண்டிருந்தான்.

அவனுக்கு வரும் கடிதங்களைப் படித்துக் காட்டவும் அவற்றிற்கு பதில் எழுதவும் அவன் கீழ் ஒரு ஏழை வாலிபன் வேலை பார்த்து வந்தான். ஒருமுறை அந்நாட்டு மன்னனிடமிருந்து கட்டளையிடப்பட்ட ஒரு கடிதம் வந்தது. அதில் "நம் நாட்டின் தெற்கு எல்லையில் போர் நடந்து கொண்டிருக்கிறது. நீ உடனே உன் படைகளோடு அங்கே போ" என்றிருந்தது. அந்தப் பிரபு மன்னனுக்குக் கப்பம் கட்டுபவன். அதனால் மன்னனின் கட்டளைப் படித்தவுடன் படைகளோடும் தன் உதவியாளனையும் அழைத்துக் கொண்டு போர்க்களத்தை அடைந்தான்.

போர் நடக்க நடக்க அந்தப் பிரபுவும் தினமும் போர் நிலவரம் பற்றி தன் உதவியாளனை எழுதச் சொல்லி அதில் தன் மோதிரத்தால் முத்திரையிட்டு அனுப்பி வந்தான். ஆனால் ஒருநாள் அந்த உதவியாளன் மீது எதிரி எய்த அம்பு படவே அவன் இறந்து போனான்.

அப்போது வேறு ஒரு உதவியாளனை நியமித்துக் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அந்த நிலையில் கூடத்தான் எழுதப் படிக்கத் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அந்தப் பிரபு

—ஸ்பெயின் நாட்டுப் பழங்கதை—



நினைக்கவில்லை. இதே சமயம் மன்னனிடமிருந்து ஒரு தூதன் வந்து பிரபுவிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து விட்டுப் போனான்.

அப்போது அந்தப் பிரபு தன் படையில் இருந்த தன் ஊர்க்கார வீரன் ஒருவனை கூப்பிட்டு அந்தக் கடிதத்தைப் படிக்கச் சொன்னான். அந்த வீரனுக்குப் பிரபுவின் மீது தீராத காட்டம் இருந்தது. ஏனெனில் அந்த வீரனின் சிறுநிலத்தை அந்தப் பிரபு ஏதோ ஒரு சாக்குச் சொல்லிப் பறிமுதல் செய்திருந்தான். அந்தப் பிரபுவுக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பதை அவன் அறிந்தவன். அதனால் இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு அந்தப் பிரபுவை இக்கட்டில் மாட்டி விட அவன் தீர்மானித்தான்.

அவன் அக்கடிதத்தைப் படித்து விட்டு "ஐயோ! ஆபத்து வந்து விட்டது. நீங்கள் உடனேயே மன்னர் முன் ஆஜராக வேண்டுமாம். உங்கள் மீது ராஜத்துரோகக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறதாம்" என்றான்.

அதைக் கேட்ட பிரபு ஆத்திரம் கொண்டு "என் மீது யார் ராஜதுரோகக் குற்றம் சாட்டுவது? தர்பாருக்குப் போய் அவனைப் பிடித்து அவன் தலையை வெட்டி எறிகிறேன் பார்" எனக் கத்தினான். பிறகு அவன் தலைநகரை நோக்கிச் சென்றான்.

வழியில் ஒரு கிராமத்தை அடையும் போது இரவு வரவே அவன் அங்கு தங்க நேரிட்டது. யாரிடமாவது தங்க இடம் கேட்பது தன் அந்தஸ்திற்குக் குறைவு என நினைத்து அவன் தன் குதிரையை ஒரு மரத்தில் கட்டிவிட்டு அந்த மரத்தின் கீழேயே அவன் படுத்துத் தூங்கினான். காலையில் எழுந்து அவன் சற்று தூரம் போன போது அங்கு பலகையில் ஏதோ எழுதி வைக்கப் பட்டிருப்பதைக் கண்டான்.

அவனுக்கோ படிக்கத் தெரியாது. ஆனாலும் அந்தப் பலகையை அணுகி அதைப் பார்க்கலானான். ஆனால் அதைச் சுற்றி வரும்போது கால் தவறி ஒரு பெரிய பள்ளத்தில் போய் விழுந்தான். பலகையில்

"ஆபத்து! இங்கே ஆழமான பள்ளம்" என்று எழுதப்பட்டிருந்தது. அதைத்தான் அந்தப் பிரபுவுக்குப் படிக்கத் தெரியவில்லையே!

எப்படியோ அந்தப் பள்ளத்திலிருந்து அந்தப் பிரபு வெளியே வந்தான். இடுப்பில் பலமான அடி. மெதுவாக முக்கி முனகி நடந்து அருகிலிருந்த கிராமத்துச் சத்திரத்தில் போய் உட்கார்ந்தான். அந்த சத்திரத்தில் தன் ஊரைச் சேர்ந்த ஒருவனை அவன் கண்டான்.

பிரபு அவனை மிடுக்காக கூப்பிட்டு "அடே! என்னை மன்னர் உடனே வரச்சொல்லி இருக்கிறார். இப்போதோ நான் தலைநகருக்குப் போகும் நிலையில் இல்லை. அதனால் என் தற்போதை நிலையை விளக்கி ஒரு கடிதம் எழுது. அதில் என் முத்திரையைப் பதிக்கிறேன்" என்றான். அவனோ அந்த பிரபு கூறியபடி கடிதம் எழுதாமல் மன்னனைக் கண்டபடி திட்டிக் கடிதம் எழுதிப் பிரபுவிடம் கொடுத்தான். பிரபுவும் அதில் தன் முத்திரை பதித்து அக்கடிதத்தை மன்னனுக்கு அனுப்பினான்.

அக்கடிதத்தைப் படித்த மன்னனுக்குக் கோபம் கோபமாக வந்தது. அவன் தன் காவல் வீரர்களிடம் "நீங்கள் போய் அந்தத் துரோகியைப் பிடித்து இழுத்து வாருங்கள்" என்று கட்டளை இட்டான். வீரர்களும் அந்தப் பிரபுவைப் பிடித்து வரவே மன்னன் அவனைச் சிறைச்சாலையில் தள்ளும்படிக் கட்டளை இட்டான்.



சிறையில் அடைக்கப்பட்ட பிரபு கர்வமிகுதியால் தான் குற்றமற்றவன் என்று மன்னனிடம் கூறவும் இல்லை. தான் ஏதாவது தவறு செய்திருந்தால் தன்னை மன்னிக்க வேண்டும் என்று வேண்டவும் இல்லை. மன்னனோ அவனைச் சித்திரவதை செய்து அவன் துரோகி என ஒப்புக் கொள்ளச் சொன்னான்.

பிரபுவோ ஊஹூும் என்று தலையாட்டித்தான் துரோகி அலல என அறிவித்தான். ஆனால் வாய்திறந்து ஒரு வார்த்தைக்கூடச் சொல்லவில்லை. மன்னனோ அவன் தான் துரோகி எனச் சொல்ல மறுக்கிறான்

என நினைத்து அவன் தலையை வெட்டி விடுமாறு கட்டளை இட்டான்.

அப்போது நீதிபதி மன்னனிடம் "அரசே! அவசரப்பட வேண்டாம். இவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது போலிருக்கிறது. யாரோ கடிதம் எழுத, அதில் தன் முத்திரையை பதித்து அனுப்பி இருக்கிறான் போலிருக்கிறது" என்றார். அப்போது மற்றொரு அரசாங்க அதிகாரியும் "இந்தப் பிரபுவுக்கு எழுதப்படிக்கத் தெரியாது என்று பலர் சொல்ல நானும் கேட்டிருக்கிறேன்" என்றான்.

மன்னனும் "அப்படியா! நாமெல்லாம் எவ்வளவு கஷ்டப்பட்டுப் படித்தோம்! இவன் ஏன் படிக்கவில்லை? தன்னிடம் பணம் இருக்கிறது என்ற திமிரா? சரி, எதற்கும் இவனுக்கு எழுதப் படிக்கத் தெரிகிறதா என்று பரீட்சித்துப் பார்ப்போம்" என்றான்.

நீதிபதியும் ஒரு காகிதத்தில் அந்த பிரபுவுக்கு மரணதண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது என்று எழுதி அதை எடுத்துக் கொண்டு சிறைச்சாலைக்குச் சென்றார். அவர் அதை அந்தப் பிரபுவிடம் கொடுத்து "இதில் நீ கையெழுத்திட்டால் உன்னை நான் விடுதலை செய்கிறேன்" என்றார்.

அந்தப் பிரபுவும் "இதில் என்ன எழுதி இருக்கிறது?" என்று கேட்கவே, நீதிபதியும் 'நீ குற்றமற்றவன். உன் மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு பொய்யானது' என்று எழுதப்பட்டிருக்கிறது" என்றார். பிரபு தன் முத்திரை மோதிரத்தை எடுத்து முத்திரையை அதில் பதித்தான்.

நீதிபதி அதை எடுத்துப் போய் மன்னனிடம் காட்டி விளக்கவே மன்னனுக்கு அப்போது அந்தப் பிரபுவுக்கு எழுதப் படிக்கத் தெரியாது என்பது தெரிந்து போயிற்று. அவன் அந்தப் பிரபுவை விடுதலை செய்துவிட்டு அவனுக்குக் கடிதம் எழுதிக் கொடுத்தவனைப் பிடித்து தண்டித்தான்.





# இதுவா சங்கதி!

ராமநாதபுரத்தில் ராமலிங்கம் என்ற வியாபாரி இருந்தான். அவன் தினமும் தன் கடையில் வியாபார மான பணத்தை எடுத்துக் கொண்டு இரவில் வீட்டிற்குப் போய் எண்ணி எடுத்துப் பெட்டியில் போட்டு பூட்டி வைப்பான். வழக்கம் போல ஒரு நள்ளிரவு அவன் பணத்தை எடுத்துக் கொண்டு கடையை மூடி விட்டுத் தன் வீட்டிற்கு வந்தான்.

உள்ளே போனதும் வாசல் கதவை சாத்தித் தாள்போட்டுவிட்டு கூடத்தில் பாய் விரித்துத் தன் பணப்பையிலிருந்த பணத்தைக் கொட்டினான். பிறகு விளக்குத் திரியைப் பெரிதாக்கி வெளிச் சத்தை அதிகரித்துக் கொண்டு பணத்தை எண்ணலானான்.

அப்போது யாரோ வாசல் கத வைத் தட்டவே ராமலிங்கம் சட் டெனத் தன் மேல்துண்டை எடுத் துப் பாயின் மீதிருந்தப் பணத்தின் மீது போர்த்திவிட்டு எழுந்து போய்க் கதவைத் திறந்தான். கதவைத் தட்டியவன் அவனது தூரத்து உற வினனான துரைசாமி. அவன் நேராக உள்ளே வந்து பணம் வைக் கப்பட்டிருந்த இடத்தில் போய் உட்கார்ந்து விட்டான்.

ராமலிங்கமும் ஓடி வந்து அவ னருகே உட்காரவே துரைசாமியும் "ராமலிங்கம்! எனக்கு இப்போதே அவசரமாக ஐம்பது ரூபாய் வேண் டும். உன்னிடம் கேட்டு வாங்கிப் போகலாம் என்று வந்தேன்" என் றான். இராமலிங்கமும் "அடடா! இன்று வியாபாரமே சரியாக இல்லை. ஐந்து ரூபாய்கூடக் கிடைக்க வில்லை. நீ கேட்கும்போது இல்லை என்று சொல்வதை நினைத்து வருத்தப்படுகிறேன்" என்றான்.

இந்த சமயத்தில் அங்கிருந்த

—சந்தியா கிருஷ்ணன்—

விளக்கு காற்றடித்ததில் அணைந்து விட்டது. அப்போது ராமலிங்கம் சட்டென துரைசாமியின் இருகைகளையும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு "ரொம்ப நாள் கழித்து வந்திருக்கிறாய், சாப்பிட்டு விட்டுப் போகலாம்" என வேண்டினான்.

துரைசாமியோ "பணம் கேட்டேன் அது கிடைக்கவில்லையே" என்னும் போதே ராமலிங்கத்தின் மனைவி வேறொரு விளக்கை ஏற்றிக் கொண்டு வந்து அவர்களின் பக்கம் வைத்தாள். அப்போது ராமலிங்கம் துரைசாமியின் கைகளைவிட்டு "சரி உன் இஷ்டம். உன் மனநிலை சரி இல்லை. இப்போது நீ இங்கே சாப்பிட விரும்ப மாட்டாய். இன்னொரு நாள் வந்தால் நீ சாப்பிடாமல் போய் விடக்கூடாது" என்று கூறி அவனை எழுப்பி வாசல் வரை கொண்டு போய் விட்டான். அவன் போனதும் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்தான்.

அப்போது அவன் மனைவி "நீங்கள் என்னவோ உங்கள் நண்பரின் கைகளைப் பிடித்து சாப்பிடும்படி வேண்டினீர்களே பிறகு சாப்பாடு போடாமலே அனுப்பி விட்டீர்களே இது என்ன மர்மம்?" என்று கேட்டாள்.

ராமலிங்கமும் "மர்மம் ஒன்றும் இல்லை. அவன் பணத்தின் பக்கம் உட்கார்ந்திருந்த போது விளக்கு அணைந்து விட்டது. எங்கே இருட்டில் எனக்குத் தெரியாமல் பணத்தை எடுத்துக் கொள்வானோ என நினைத்து அவனைச் சாப்பிடக் கூப்பிடுவது போல அவனது இரு கைகளையும் பிடித்துக் கொண்டு வேண்டுவது போல நடித்தேன். நீ விளக்கைக் கொண்டு வந்த பிறகு அவனுக்குச் சாப்பாடு போட விரும்பாமல் தட்டிக்கழித்து அனுப்பினேன்" என்றான்.

அவன் மனைவியும் "ஓ! இதுவா சங்கதி!" என்று கூறி ஆச்சரியப் பட்டாள்.



## நீலநிற ரோஜா

ஒரு காலத்தில் நடக்கவே நடக்காது எனக் கருதப்பட்ட விஷயங்கள் எல்லாம் தற்போது நடக்கும் என்றாகி விட்டது. ஏனெனில் நீலநிற ரோஜாக்களை ரோஜாச் செடிகளில் மலர வைக்க முயற்சிகள் நடந்து வருகின்றன. ஆஸ்திரேலியாவில் விஞ்ஞான வல்லுனர்கள் இதற்கான ரசாயனக் கலவையைத் தயாரித்து ரோஜா மொட்டுகளில் நீலநிறத்தை ஏற்ற முயன்று கொண்டிருக்கிறார்கள். 1993ல் இம்முயற்சி வெற்றியடையுமாம்.





## அபூர்வக் கழுகுகள்

நம் நாட்டில் எட்டு ரகப் பருந்துகள் உள்ளன. இவற்றில் புதுச்சேரி பருந்துகள் மிக அபூர்வம். இவை இப்போது நசிந்து கொண்டே போகின்றன. இவ்வகைப் பருந்துகள் ஸ்ரீலங்காவிலும் பங்களாதேஷிம் இருந்தன. ஆனால் இப்போது இல்லை. இப்போது அகமதாபாத்திலுள்ள கமலா நேரு உயிரின அருங்காட்சியகத்தில் இந்த வகைப் பருந்துகள் மூன்று உள்ளன. இவற்றின் தலைப்பகுதி சிவப்பு நிறம். இவை எப்போதும் தனித்தே இருக்கும்.

## எண்ணிக்கையில் ஏராளம்

பூவுலகில் உயிரினங்களில் எண்ணிக்கையில் மிக அதிகமானவை புழு பூச்சிகளே. இவற்றில் புழுக்கள் மட்டும் 250,000 ரகங்கள் உள்ளன. பூச்சிகளில் 5,000,000 வகைகள் உள்ளன. உலகில் புழு பூச்சிகளின் மொத்த எண்ணிக்கை 1,000,000,000,000,000,000



# விடுமுறை நாட்கள் வேடிக்கையாய்ப் பொழுது போக்க-அத்துடன் பணம் கூடச் சம்பாதிக்கலாம்!

விடுமுறை என்றாலே நிறைய நேரம் இருக்கும். இந்த ஆண்டில் விடுமுறையில் பணம் சம்பாதிக்கலாமே. எப்படியா?

## இந்தத் திட்டம் மாணவர்களுக்கு மட்டுமே

இது மிக எளிதே-நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் அம்புலிமாமாவிற்கோ அதன் மற்ற எந்த மொழிப்பதிப்பிற்கோ ஒருவருட சந்தாவைச் சேர்த்துக் கொடுங்கள். இப்பத்திரிகை பனிரெண்டு மொழிகளில் வெளியாகிறது. இதன் வருட சந்தா ரூ 48. இதில் உங்கள் பங்காக ரூ 10 கிடைக்கும். இது எங்கள் ஏஜண்டுகள் பெறுவதை விட மிக அதிகமானதே.

## 10 சந்தாக்களைச் சேர்த்துக் கொடுத்தால் உங்களுக்குக் கிடைப்பது முழுசாக ரூ 100

நீங்கள் எவ்வளவு சந்தாக்களை வேண்டுமானாலும் சேர்க்கலாம். இதற்கு ஒரு வரையறுப்பு இல்லை. மிக அதிகப்படியான சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுக்கும் முதல் மாணவர்களுக்கு (மாணவிகளுக்கும் கூடத்தான்) சந்தாமாமா உபகாரச் சம்பளம் கிடைக்கும். அடுத்த 100 மாணவர்களுக்கு 'சந்தமாமா டீ ஷர்ட்டுகள்' பரிசளிக்கப்படும். இதெல்லாம் உங்களுக்கு போனஸ். இதனால் நீங்கள் உங்கள் வியாபாரத்திறனை அதிகரித்துக் கொள்வதோடு மக்களுடன் தொடர்பு கொள்ளும் ஒரு வழியையும் மேற்கொள்கிறீர்கள்.

இதில் சடுபாடு உண்டா? உங்கள் கல்வி நிலையம் பற்றிய விவரமும் உங்களது 2 பாஸ்போர்ட் அளவு போட்டோகளும் அனுப்புங்கள். அப்போது நீங்கள் அடையாள அட்டையையும் சந்தா விற்கான படிவங்களையும் பெறுவீர்கள்.

## அம்புலிமாமா

சந்தமாமா சந்தா விரிவுப்பிரிவு

188, என்.எஸ்.கே. சாலை, வடபழனி, சென்னை-600 024

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1992 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்



M. Natarajan



Mahatesh C. Morabad.

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஆகஸ்ட் 10ந் தேதிக்குள் போட்டிக்கான த்லைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026

## ஜூன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **அறிவுச்சுடருடன் உறவாடும் இளைய சமுதாயம்**

இரண்டாவது போட்டோ: **அறியாமை இருளுடன் உலாவிடும் இளைய சமுதாயம்**

பரிசு பெற்றவர்: **த. சோமசுந்தரேஸ்வரி, திருப்பூர்-4**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



**அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்**

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ் அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. **105.00** விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே., யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு

கடல் தபால் வாயிலாக ரூ. **111.00** விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ் என எழுதி

சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்